# சைவ சித்தாந்தம் கூறும்
# தத்துவங்களும் தாத்துவிகங்களும்
# ஒரு விஞ்ஞான நோக்கு

இ. நமசிவாயம்.

உ

சிவமயம்

# சைவ சித்தாந்தம் கூறும் தத்துவங்களும் தாத்துவிகங்களும்

----

## ஒரு விஞ்ஞான நோக்கு


இ. நமசிவாயம்

*சட்டத்தரணி*

*மற்றும்*

*திருக்கேதீச்சுவர ஆலயத் திருப்பணிச் சபைச் செயலர், அறங்காவலர், செயற்குழு உறுப்பினர், அறங்காவலர்க்குழுச் செயலர்*



*1997*

பதிப்புரிமை:
முதற்பதிப்பு: 1997 தை

விலை:
இந்தியா: ரூ 100/ -
இலங்கை: ரூ 150/-
இங்கிலாந்து: 10 பவுண்
அமெரிக்கா: 15 டொலர்

✱. இந்நூல் விற்பனைத் தொகை இலங்கைத் திருக்கேதீச்சர ஆலய நிதிக்குச் சேரும்.

Dr. R. K. NAMASIVAYAM
97 PARCHMOKE ROAD
THORNTON HEATH
SURREY CR 78 LY
181 Tel : 2514200.

R. NAMASIVAYAM
NO. 20 PAPNASA SIVA SALAI
SANTHOME - 600 004.
Tel : 8547687

SIVAKUMAR NAMASIVAYAM
4/1 ADAMS AVENUE
COLOMBO - 4
Tel : 585258

அச்சிடல் தயாரிப்பு:
மறவன்புலவு, க. சச்சிதானந்தன்,
***காந்தளகம்,*** 834 அண்ணா சாலை, சென்னை - 600 002.



## பொருளடக்கம்

## காப்பு

திருவாக்கும் செய்கருமங் கைகூட்டும் செஞ்சொற்
பெருவாக்கும் பீடும் பெருக்கும் - உருவாக்கும்
ஆதலால் வானோரும் ஆனை முகத்தானைக்
காதலால் கூப்புவர்தங் கை



## இறைவணக்கம்

பேழை வார்சடைப் பெருந்திரு மகள்தனை
பொருந்த வைத் தொருபாகம்
மாழை அங்கயற் கண்ணிபால் அருளிய
பொருளினர் குடிவாழ்க்கை
வாழை யம்பொழில் மந்திகள் களிப்புற
மருவிய மாதோட்டம்
கேழல் வெண்மருப் பணிந்தநீள் மார்பர்,கே
தீச்சரம் பிரியாதே.

சுடுவார்பொடி நீறும், நல்ல துண்டப் பிறை கீளும்
கடமார்களி யானையுரி, அணிந்தகறைக் கண்டன்
பட ஏரிடை மடவாளொடு பாலாவியின் கரைமேல்
திடமா உறை கின்றான் திருக் கேதீச்சரத் தானே.

## நடராசர் துதி

உலகெலா முணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர் சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்



## முருகக் கடவுள் துதி

மூவிரு முகங்கள் போற்றி முகம்பொழி கருணை போற்றி
ஏவரும் துதிக்க நின்ற ஈராறுதோள் போற்றி காஞ்சி
மாவடி வைகுஞ் செவ்வேள் மலரடி போற்றி யன்னான்
சேவலும் மயிலும் போற்றி திருக்கைவேல் போற்றி போற்றி

## கௌரி துதி

செறிதரும் உயிர்தொறுந் திகழ்ந்து மன்னிய
மறுவறு வரனிட மரமின் மேவிய
அறுவகை நெறிகளும் பிறவு மாகிய
இறைவிதன் மலரடி இறைஞ்சி யேத்துவாம்



உ

குருபாதம்

**திருக்கயிலாய பரம்பரைத் தருமை ஆதீனம்**

**26 வது குருமகாசந்நிதானம்**

*ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்*

தருமபுரம், மயிலாடுதுறை 609 001.

10.10.1996.

**''ஞாலம் நின்புகழே மிகவேண்டும் தென்**
**ஆலவாயில் உறையும்எம் ஆதியே.''**

அன்பர் திரு. இ. நமசிவாயம் அவர்கள் எழுதிய *''சைவ சித்தாந்தம் கூறும் தத்துவங்களும் தாத்துவிகங்களும் - ஒரு விஞ்ஞான நோக்கு''* எனும் நூலைப் பார்த்து மகிழலாயிற்று. எளிய நடையில் அமைந்துள்ளது. பொருட்டிறல் ஆற்றொழுக்காகவும், ஆழமான பொருட் சிறப்பு உடையதா கவும் அமைந்துள்ளது. மேனாட்டு அறிஞரான ஐன்ஸ்டீன் அவர்களின் கருத்தோடு இயைபுபடுத்தி எழுதியிருப்பது பாராட்டுதற் குரியது.

தன் மாத்திரை, கலை, போன்ற சொற்களுக்குப் பொருள் விரித்திருப்பதும், மாயை, நாததத்துவங்களுக்கு விளக்கம் கண்டிருப்பதும் சிறப்பாக அமைந்துள்ளன.

இரண்டாவது பாகத்தில் சிவதத்துவ விளக்கமும், இறைவனின் இனிய கருணைத் திறமும் நன்கு புலப்படுத்தப் பெற்றுள்ளது.

இக்கருத்துகள் நூல் வடிவில் வருதல் பெரிதும் பயன் தருவதாகும். ஆசிரியரின் நன்முயற்சி மேலும் இத்தகைய நூலை உருவாக்கவும், ஆசிரியர் திரு. இ. நமசிவாயம் அவர்களுக்கு எல்லா நலங்களும், வளங்களும் மேன் மேலும் பெருகவும் செந்தமிழ்ச் சொக்கன் திருவடிகளைச் சிந்திக்கின்றோம்.

உ

சிவ சிவ

**ஸ்ரீகாசி மடம், திருப்பனந்தாள், தலைவர்,**

*கயிலை மாமுனிவர்,*

*ஸ்ரீலஸ்ரீ காசிவாசி, முத்துக்குமாரசுவாமித்தம்பிரான் சுவாமிகள்*

திருப்பனந்தாள்

10.12.96

இறைநேயமும், சமயப் பற்றும், தெய்வீகத் திருப்பணி களில் ஈடுபாடும் மிக்குடைய, திருக்கேதீச்சரம், திரு. இ. நமசி வாயம் ''*சைவ சித்தாந்தம் கூறும் தத்துவங்களும் தாத்து விகங்களும் - ஒரு விஞ்ஞான நோக்கு*'' என்னும் நூலை வெளியிடவிருப்பது பாராட்டுக்குரியது. நல்ல முயற்சி. மகிழ்ச்சி.

பதி, பசு, பாசம் எனப் பகர் மூன்று பற்றித் தொடங்கி மாயை பற்றிய விளக்கம், மும்மலம், சித்தம், சந்தானாச் சாரியார் முதலான பல பொருள்கள் பற்றி மிக எளிமை யாகவும், நுட்பமாகவும், எண்பொருளவாகவும் செலச் சொல்லியுள்ள திறம் சிறப்புடையது.

திருமந்திரம், திருவாசகம், சிதம்பர மும்மணிக் கோவை முதலான நூல்களின் பொருந்திய மேற்கோள்கள் இடமறிந்து குறிக்கப் பெற்றுள்ளன.

புகழ்பெற்ற ஐன்ஸ்டீன் எனும் விஞ்ஞானியின் சிறப்பான கோட்பாடும் சித்தாந்தச் செம்பொருளும் ஒப்பீடு செய்யப்பெற்று விளக்கப்படும் திறம் குறிப்பிடத்தக்கதாகும்.



தொகுத்தும், வகுத்தும், விரித்தும், உட்பொருள்கள் தக்க தலைப்புகளில், உட்பிரிவுகளில் அழகுற விளக்கப் பெற் றுள்ளமை படைப்பாளரின் நுட்பமான நுழைபுலத்தைக் காட்டுகிறது.

கற்பன விரித்துரைத்தலும், விரித்து எழுதுதலும் சிறப்பான பணிகளாகும். இத்தகு பணியைச் செய்துள்ள அன்பர் திரு. நமசிவாயம் அவர்களின் பணி மேன்மேலும் சிறப்பதாகுக எனவும், நூல் வெளியீடு இனிதே நிகழ்வதாகுக எனவும், பயில்வோர்க்குத்தக்க பயனை இந்நூல் விளைப்ப தாகுக எனவும் செந்திற்கந்தன் சேவடிகளைச் சிந்தித்து வாழ்த்துகிறோம்.

சுபம்.

சிவ சிவ.

உ
சிவ சிவ

# முன்னுரை

**பேராசிரியர் டாக்டர் வை. இரத்தினசபாபதி**
**மேனாள் தலைவர், சைவசித்தாந்தத்துறை சென்னைப் பல்கலைக் கழகம், ஆசிரியர் 'சித்தாந்தம்' சைவசித்தாந்தப் பெருமன்றத் திங்களிதழ்.**

சிவனொடு ஒக்கும் தெய்வம் தேடினும் இல்லை
அவனொடு ஒப்பார் இங்கு யாவரும் இல்லை
புவனம் கடந்தன்று பொன்னொளி மின்னும்
தவளச் சடைமுடித் தாமரை யானே.

பொன்னால் புரிந்திட்ட பொற்சடை என்னப்
பின்னால் பிறங்க இருந்தவன் பேர்நந்தி
என்னால் தொழப்படும் எம்இறை மற்றவன்
தன்னால் தொழப்படு வார்இல்லை தானே.

என்பன திருமூலரால் தம் அருளனுபவத்தின் அடிப் படையில் அருளப்பெற்ற இரண்டு தமிழ்கள்.

''சிவன் என்னும் நாமம் தனக்கே உரிய செம்மேனி எம்மான்'' என்றும், '' சிவன் என்னும் ஓசையல்ல தறையோ உலகில் திருநின்ற செம்மை உளதே'' என்றும் அப்பரடிகளால் உணர்ந்து ஓதப்பெற்ற செம்பொருளாம் சிவத்துடன் சம்பந்த



மாகும் திருவுடைச் சமயமே சைவ சமயம்.

சைவ சமயம் சார்ந்த பிரிவுகள் பலவாயிருப்பதும் தென் தமிழ் நாட்டு மக்களால் அறிவதற்குரியதாகவும் அடைந்து அனுபவித்தற்குரியதாகவும் வழக்கிலுள்ள பெருநெறியானது சைவசித்தாந்தச் செந்நெறியே.

'அவனே, தானே ஆகிய அந்நெறி' என்று இதனை எடுத்துக் கூறிய மெய்கண்டார் இந்நெறியின் அனுபவநிலையை ஏகன் ஆகி இறைபணி நிற்றல் என்று எடுத்துக் காட்டிச் சிறப்பித்தார்.

வேதங்களின் உயிரோட்டமாக அமைந்துள்ள மகா வாக்கியங்களை ஏற்றுக்கொண்டு அனுபவப் பொருளை வழங்கியும் ஆகமங்களை உடன் கொண்டு அமைக்கப் பெற்ற அனுபவக் கருவூலங்களின் தொகையாக விளங்குவதே சைவ சித்தாந்தப் பெருநெறி.

முப்பதும் ஆறும் படிமுத்தி ஏணியாய்
ஒப்பிலா ஆனந்தத்து உள்ளொளி புக்குச்
செப்ப அரிய சிவம் கண்டு தான் தெளிந்து
அப்பரிசாக அமர்ந் திருந்தாரே

=திருமந்திரம்-126

என்ற திருமூலர் திருமந்திரத் தமிழால் தத்துவங்கள் முப்பத்தாறு கடந்துதான் சிவம் என்னும் செம்பொருள் கண்டு அடைந்து அனுபவிக்க வேண்டும் என்று குறிப்பிட்டுள்ளமை கண்டு தெளியலாம்.

முப்பத்தாறு தத்துவங்களையும் அவற்றின் காரியமாக விளங்கும் அறுபது தாத்துவிகங்களையும் முழுமையாக எடுத்து, விரித்தும், விளக்கியும் தெளிவான நடையில் எழுதப் பெற்ற நூலே இந்நூல்.

சைவ சித்தாந்தக் கொள்கையை உணர்ந்தவர்களிலுங் கூட, தத்துவ, தாத்துவிக விளக்கங்களைத் தெளிவாக எடுத்து விளக்கும் வல்லமை பெறாதவர்கள் பலர் உண்டு. சைவசித்தா ந்த நுண்பொருளைத் தத்துவ, தாத்துவிக விளக்கங்களுடன் தெளிவாகத் தெரிந்து கொள்வதற்குப் பெரிதும் பலன் பெறும் உயரிய நூல் இந்நூல்.

சைவ சித்தாந்தத் தத்துவ நுட்பங்களை இன்றைக்கு வளர்ந்து வரும் விஞ்ஞானக் கொள்கைகளுடன் இணைத்துக் காட்டி, சைவ சித்தாந்தம் ஒரு விஞ்ஞான அடிப்படையைக் கொண்ட வாழ்வியற் கொள்கை என்று புதிய நோக்கத்தில் விளக்கம் கண்டு, அரிதின் ஆய்ந்து தெளிவான தமிழில், எளிமையாக எழுதப் பெற்றுள்ளது இந்நூல்.

''*சைவ சித்தாந்தம் கூறும் தத்துவங்களும் தாத்துவி கங்களும் - ஒரு விஞ்ஞானநோக்கு*'' என்ற தலைப்பில் எழுதப்பெற்ற இந்நூல் *இரண்டு பாகங்கள்* ஆக அமைக்கப் பெற்ற உயர்ந்த ஆய்வியல் நூல்.

இலங்கையில் பல்லாண்டுகள் சட்டத்தரணியாகப் பணி புரிந்ததோடன்றி, திருக்கேதீச்சுரத் திருப்பணிச் சபையின்



செயலர், அறங்காவலராக-அமைந்த பேராளரும் சிவ, ஆகமங்களின் வழி அனைத்துத் திருக்கோயில் அமைப்பு வழிபாட்டு முறைகளும் அமைய வேண்டும் என்று அயராது பாடுபட்டுத் தம் உடல், பொருள், ஆவி ஆய அனைத்தையும் ஆகமச் சைவப் பணிக்கே அர்ப்பணித்தவரும், நாளும் தவறாது சிவபூசை செய்து திருமுறைப் பாராயணம் செய்பவரும், சிறந்த ஒழுக்க சீலரும், யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுக நாவலரின் வழிநின்று சைவ சித்தாந்தச் செந்நெறி பேணும் அன்பினரும், என்னுடைய அன்பின் கெழுதகைச் சான்றோரும் ஆகிய சிவப்பெருந்திருமிகு இ. நமசிவாயம் அவர்கள் அரிதின் முயன்று, எளிதின் இயற்றிய இந்நூல் அனைத்துச் சைவப் பெருமக்களாலும் போற்றியுணரப் பெறும் புனிதம் உடையது; பயன் உடையது என்று எழுதுவதில் பெருமகிழ்ச்சி அடைகிறேன்.

சைவ சித்தாந்தத்தை அனுபவ வழி நின்று விளக்கு பவர்கள் அருளாளர்கள். கொள்கையைத் தெளிவாக எடுத்துக் கூறி விளக்கும் மெய்ப் பொருளியலாளர் வழிநின்று சைவ சித்தாந்தத் தத்துவங்களை முன்பின் முரண்பாடு இன்றி, அடைவுடன், பிறழ்ச்சி இன்றி எழுதப்பெற்ற இந்நூல் இந்த வகையில் இதுவரை வெளிவராத புதுமையும் தெளிவும் பொலிவும் அமைந்த நூலாகும்.

விஞ்ஞான வழியில் நின்று சைவ சித்தாந்தத்தை விளங்கிக் கொள்ள முயல்வார்க்குப் பெரிதும் துணை செய்யும் அரிய நூலாகும் இது.

வணக்கத்துக்கும் போற்றுதலுக்கும் உரிய நூலாசிரியர்

சிவஞானப் பெரும் புலமைச் சைவத் தனிநாயகர் சிவத்திரு இ. நமசிவாயம் அவர்கள் இயற்றிய இந்நூல் சைவப் பெருமக்களின் இல்லந்தோறும் அணிசெய்ய வேண்டிய அரிய நூலாகும்.

தவத்திரு வாலயானந்த சுவாமிகள் போன்றோர் சைவ சித்தாந்தப் படவிளக்கம் அமைத்துக் காட்டியுள்ளார்கள். அவை இப்போது கிடைத்தற்கரிய. அரிய நுட்பங்களை யெல்லாம் எடுத்துக் காட்டிச் சைவ சித்தாந்தத் தத்துவங்களையும், தாத்துவிகங்களையும் விளக்கும் இந்நூல் சைவப் பெருமக்களின் உள்ளார்ந்த தத்துவ, தாத்துவிக ஐயங்களை நீக்கும் அரிய நூலாகும்.

காலத்தின் தேவை அறிந்து, சைவ சித்தாந்தப் பெருமக்களின் அடிப்படைத் தத்துவ விளக்கங்களை ஆக்கித்தந்த பேராளர் சைவத்திரு. இ. நமசிவாயம் அவர்கள் பல்லாண்டு வாழ்ந்து இத்தகைய நூல்கள் பலவற்றை ஆக்கித் தரவேண்டும் என்று பணிவன்புடன் வேண்டி, அவரடி பணிந்து இறைஞ்சுகிறேன்.

**ஐப்பசிச் சுவாதி நாள்**
10.11.96.

**இங்ஙன்,**
**அன்பன்**
**வை. இரத்தினசபாபதி**



**உ**
**சிவமயம்**

## முகவுரை

1993-1994 ஆண்டுகளில் ஒருவருடம் பத்து மாதங்கள் வரை, இங்கிலாந்திலுள்ள இலண்டன் புறநகரான குறோயிடனில் எனது மூத்தமகன் டாக்டர். ஆர். கே. நமசிவாயம் அவர்களுடன் தங்கியிருந்தேன். அப்பொழுது -

*Cosmos* by Carl Sagan,

*After Glow of Creation- From Fire Ball to the Discovery of Cosmic Ripples* by Marcus Chown

and

*The Tao of Physics - An Exploration of the parallels between Modern Physics and Eastern Mystecism* by Fritjof Capra

ஆகிய விஞ்ஞான ஆராய்ச்சி நூல்களை வாங்கிப் படிக்கும் வாய்ப்பு கிடைத்தது. இவர்கள் பௌதிகவியல், வானவியல் ஆகியவற்றில் உலகப் புகழ்பெற்ற விஞ்ஞானிகள். இவர்களால் கண்டுபிடிக்கப்பட்ட உண்மைகளுக்கும் சைவசித்தாந்தம் கூறும் உண்மைகளுக்கும் மிகுந்த ஒப்புதல் இருந்தது. இவ்விசேட அம்சம் சைவத்திற்கு மட்டுமே உரியது. சைவசித்தாந்தம் கூறும் மாயை முப்பத்தாறு தத்துவங்களாக நின்று, மூவகை உயிர்களுக்கும் உலகாகவும் உடலாகவும் பயன்படுகிறது. தத்துவம் என்பதற்குக் ''கருவி'' என்பது பொருளாகும்;

**சைவ சித்தாந்தம் மட்டுமே கூறும் கால அளவை**

களுக்கும் இன்றைய அண்டம் முழுமை விஞ்ஞானம் கூறும் கால அளவைகளும் ஒத்திருக்கின்றன, இவற்றை உணர்ந்தே இந்நூலை எழுத முற்பட்டேன். இது எனது முதல் நூலாகும். இதில் வழுக்களும், குற்றங்களும் ஏற்படுவது இயல்பு. குற்றங்களையும் வழுக்களையும் தவிர்த்து குணங்களை ஏற்குமாறு வேண்டுகிறேன்.

ஆசியுரை அருளிய, தருமை ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்களுக்கும், திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமட அதிபர் ஸ்ரீலஸ்ரீ முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமி அவர்களுக்கும் எனது வணக்கம் கலந்த நன்றியையும் தெரிவிக்கிறேன். இந்நூற்கு அணிந்துரை வழங்கிய முனைவர் வை. இரத்தினசபாபதி அவர்களுக்கும் நான் பெரிதும் கடப் பாடுடையேன். முனைவர் கு. சுந்தரமூர்த்தி அவர்கள் இந் நூலை வாசித்துச் சரிபார்த்து உதவிசெய்துள்ளனர். அவர் களுக்கு எனது நன்றியைத் தெரிவிக்கின்றேன். காலத்துக்குக் காலம் ஆலோசனைகள் அளித்து வந்த சித்தாந்தரத்தினம் திரு.க. கணேசலிங்கம் (பொறியியலாளர்), மற்றும் திரு. நா. சந்திரசேகரன் ஆகிய இருவருக்கும் நன்றியுடையவனா வேன். எனக்கு உற்றவர் மறவன்புலவு க. சச்சிதானந்தன் பதிப்பு ஆலோசனைகள் வழங்கி என்னை ஊக்குவித்ததுடன் சிறப் பாக அச்சேற்றியுமுள்ளார்.

சென்னை இ. நமசிவாயம்.
14.01.97



# முதற் பாகம்

உ
கணபதி துணை

# 1. அறிமுகம்

**மூவா முதல முப்பொருள்**

சைவசித்தாந்தத்தின் அடிப்படைத் தத்துவம் முப்பொருள் உண்மை. அவை - பதி, பசு, பாசம் என்பன. அவை நித்தியப் பொருள். பாசம் மூன்றாகவுள்ளது. ஆணவம், கர்மம், மாயை என்பவை. உலகத்தோற்றத்திற்கு மூலகாரண மாய் இருப்பது மாயை என்னும் பொருளாகும்.

**அளப்பரும் ஆற்றல்**

உலகில் காணப்படும் பஞ்சபூதங்கள் - நிலம், நீர், தீ, காற்று, விசும்பு முதலிய பொருட்களை விஞ்ஞான முறையில் பகுத்துக்கொண்டு போனால் மூலக்கூறாகவும் (Molecule), மேலும் பகுத்தால் பரம அணுவாகவும், இப்பரம அணுவைப் பிரித்தால் - புறோற்ரோன் (Proton) நியூற்றோன் ( Neutron) இலெக்றோன் (Electron) ஆகவும் அமையும்.

இவற்றில் முதல் இரண்டையும் மீண்டும் பிரித்தால் 'குவாக்' (Quark) ஆகப் பிரிந்து ஒரு பேராற்றலாக (Energy) மாறுகிறது. புறோற்ரோன் நேர்மின் சத்தியுள்ளது ( Positive Electric Charge), நியூற்றோன், புறோற்ரோனைப் போன்றது; ஆனால் மின்சத்தி இல்லாதது. இலெக்றோன் எதிர்மின்சத்தி (Negative Electric Charge) உள்ளது.



**அணுவினைச் சத கூறிட்ட கோண்**

ஒரு பரம அணுவின் அளவு - ஒரு மீட்டரின் (Meter) நூற்றில் ஒரு பங்கு, ஒரு சென்றிமீட்டர் . (Centimeter) அதைப் பத்துக் கோடி சமகூறாகப் பிரித்தால் ஒரு கூறின் அளவாகவுள்ளது பரம அணு. கெட்டியான பொருளன்று. உட்கருவுள்ள (Nucleus) பொருள்.

**தோற்றம் - ஒடுக்கம்**

இக்கருத்தின் அடிப்படையில்தான் சைவசித்தாந்தம் எல்லாச் சடப்பொருள்களின் திரண்டமயம்-மாயை என்றும் அதனின்றும் உலகச் சடப்பொருள்கள் தோன்றி நின்று பின்னர் அதனுள்ளே ஒடுங்கும் என்றும் கூறுகிறது.

உலகில் காணப்படும் சடப்பொருள்களை மூலம் எனக் கூற முடியாது. ஏனெனில் அவை அனைத்தும் காலகதியில் அழிகின்றன. அழிகின்ற பொருள்களுக்கு மூலமாய்- அழியாமல் நித்தியமாய் ஒரு பொருள் இருக்க வேண்டும். அதுதான் மாயை.

**இல்லது பிறவாது ; உள்ளது சிதையாது**

சடப்பொருள்கள் அனைத்தும் அறிவற்றவை. சடப்பொருள்களுக்கு அறிவற்ற மாயை மூலப்பொருளாக உள்ளது. அதுதான் இயல்பு. அறிவுள்ள பொருளிலிருந்து அறிவற்ற பொருள் உண்டாகாது. சிவபெருமான் பேரறிவுப் பொருள். அவரிடமிருந்து அறிவற்றமாயை உண்டாகி இருக்க

முடியாது. அடுத்து இன்மையிலிருந்து எதுவும் உண்டாகாது. மறுதலையாக எதுவும் இன்மைநிலை அடையாது. இது சைவசித்தாந்தம் கூறும் சற்காரிய உண்மை. இரசாயன (Chemistry) சாத்திர விதிப்படியும் எதுவும் இன்மை நிலை அடையாது ( Matter is indestructible).

**என்று அவன் , அன்று அது**

சிவபெருமானிடமிருந்து மாயை உண்டாகியிருந்தால் அஃதும் அவரைப் போல அறிவுள்ளதாக இருக்கும். மாயை அறிவற்றதாக இருப்பதால் அது அவரிடமிருந்து உண்டாக வில்லை என்றும் அதுவும் அவரைப் போலவே நித்தியப் பொருள் என்றும் சைவசித்தாந்தம் கூறுகிறது.

மாயை அறிவற்ற சடப்பொருளாக இருப்பதால் அது தானாகவே உலகத்தைத் தோற்றுவித்திருக்க முடியாது.

**தாம் உள ஆக்கினான்**

பேரறிவுப் பொருளாகிய சிவபெருமான்தான், உயிர் களுக்கு அறிவு விளங்கும்பொருட்டு மாயையிலிருந்து இவ் வுலகத்தையும் தோற்றுவித்துள்ளார். மேற்கோள்:- மட்குடத் தின் தோற்றத்திற்கு மூலகாரணம் மண். மண் அறிவற்றதாக இருப்பதால் அது தானாகவே குடத்தைத் தோற்றுவிக்க இயலாது. அதற்கு ஒரு குயவன் தேவை. மண் மூலகாரணம், குயவன் நிமித்த காரணம், திரிகை துணைக்காரணம், குடம் காரியப் பொருள். இதுபோன்று, உலகத்தைப் படைப்பதற் கும் மூலகாரணம் மாயை. நிமித்த காரணம் சிவபெருமான். துணைக்காரணம் சிவசத்தி. காரியப் பொருள் உலகம். மாயை பொருளால் ஒன்றே தான். ஆனால் அதன் செயற்பாடு பலதிறப்பட்டது.



**அளப்பில் ஆற்றல்**

சைவசித்தாந்தம் மாயை எனக் கூறும் பேராற்றலை (Primordial energy) உலகப்புகழ்ப்பெற்ற பேராசிரியரும் விஞ்ஞானியும் சிந்தனையாளருமான ஐயின்ஸ்ரயின் (Einstein), $E = M \times C^2$ என்ற கணிதக்குறிப்பினால் ( Formula) விளக்கியுள்ளார். பேராற்றல் E, பிண்ட அளவு M, ஒளியின் இரு மடங்கு வேகம் $C^2$ . இது ஏறத்தாழ ஒரு நொடிக்கு 600 இலட்சம் மீட்டராகும். (Sixty million metres per second, approximately).

**மூவகை உயிரி**

உயிர்களிலும் - விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் என மூவகை உண்டு.

ஆணவத் தாரொன் றறியாத கேவலர்
பேணிய மாயைப் பிரளயா கலராகுங்
காணும் உருவினர் காணாமை காண்பவே
பூணுஞ் சகலர்முப் பாசமும் புக்கோரே

=திருமந்திரம் 2240

**மூவகையர் -மூவகை உலகு**

ஆணவம் ஒன்றுமே உடையோராய், மாயை, கன்மங் கள் அறியாதவர் விஞ்ஞானகலர் ஆவர்; ஆணவத்துடன் மாயை பொருந்தினவர் பிரளயாகலர் ஆவர்; ஆணவம், கன்மம், மாயை ஆகிய மூன்றும் பொருந்தியவர் சகலர் ஆவர். இம்மூவகையினரும் செயலாற்ற, மூவகையான உலகம் வேண்டும்.

சிவபெருமான் தன் திருவருட் சக்தியை மாயையின் ஒரு பகுதியில் மிகவும் முனைக்கும்படிச் சங்கற்பிக்கிறார்.

அப்பகுதி சுத்தமாயை எனப் பெயர் பெறுகிறது. அடுத்து மற்றொரு பகுதியில் தன் திருவருட் சக்தியைக் குறைவாக முனைக்கும்படிச் சங்கற்பிக்கிறார். அப்பகுதி சுத்தாசுத்த மாயை அல்லது மிச்சிரம் (கலப்பு) எனப் பெயர் பெறுகிறது. இன்னும் ஒரு பகுதியில் திருவருட் சக்தியை, சிவபெருமான் மிக மிகக் குறைவாக முனைக்கும்படிச் சங்கற்பிக்கிறார். அப்பகுதி அசுத்தமாயை அல்லது பிரகிருதிமாயை. இவ்வாறு மூவகை யாக இடம் கொடுக்கிறது. நாம் சகலர், நாம் வசிக்கின்ற இந்த உலகம், பிரகிருதி மாயையைச் சேர்ந்தது.

மாயை முப்பத்தாறு தத்துவங்களாக நின்று மூவகை உயிர்களுக்கும் உலகாகவும் உடலாகவும் உள்ளது. உயிர்கட்கு அவை போக்கிய காண்டமெனவும் காரணக் குறிபெற்று முத்திறப்படும்.

**தத்துவத் தோற்றம்**

மூவகை மாயையிலிருந்து தத்துவங்கள் தோன்று கின்றன. தத்துவமென்றால் கருவி என்பது பொருளாகும்.

சைவசித்தாந்தம் ஒன்றே முப்பத்தாறு தத்துவங்களைக் கூறுகிறது. ஏனைய சமயங்களில் பெரும்பாலானவை இரு பத்துநாலு தத்துவங்களைக் கூறுகின்றன.

ஆகின்ற தொண்ணூ றோடாறும் பொதுஎன்பர்
ஆகின்ற வாறாறாறுஞ் சைவர் தத்துவம்
ஆகின்ற நாலேழ் வேதாந்தி வயிணவர்க்கு
ஆகின்ற நாலாறை யைந்து மாயா வாதிக்கே'' -

=திருமந்திரம் 2179

**தத்துவ விரிவு**

சைவர் கொண்டுள்ளது 36 தத்துவங்களாகும்.



வேதாந்த சமயத்துக்குள்ளன 28 தத்துவங்கள். வைணவர்க்கு உள்ள தத்துவம் 24. மாயாவாதிக்குரிய் தத்துவம் 25 ஆகும்.

நாலாறுடன் புருடனற்றத் துவமுடன்
வேறான ஐயைந்து மெய்புருடன்பரங்
கூறாவியோமம் பரமெனக் கொண்டனன்
வேறான நாலேழு வேதாந்த தத்துவமே'' -

=திருமந்திரம் 2172

**நாலேழ் ஆகுவ**

வேறான ஐயைந்து - பூதங்கள் 5, இந்திரியங்கள் 10, தொழில்கள் 10, ஆன்மா 1, பிரமம் 1, பரமாகாயம் 1, ஆக 28.

**ஆறு ஆறு என்ப**

சுத்தமாயை தத்துவங்கள் ஐந்து அவையாவன:-

(1) சிவம் (2) சக்தி (3) சாதாக்கியம்
(4) ஈசுவரம் (5) சுத்தவித்தை.

சுத்தாசுத்த (மிச்சிர) தத்துவங்கள் ஏழு.
அவையாவன:-

(1) காலம் (2) நியதி (3) கலை
(4) வித்தை (5) அராகம் (6) புருடன்
(7) மாயை

**முந்நான்கிரட்டி**

பிரகிருதிமாயா (அசுத்தமாயை) தத்துவங்கள் இருபத்து நான்கு. அவையாவன:-

(1) மண் (2) நீர் (3) காற்று
(4) விசும்பு (5) தீ-

இவை ஐந்தும் பூதமெனப் பெறும்.

(6) நாற்றம் (7) சுவை (8) ஒளி
(9) ஊறு (10) ஒலி -

இவை ஐந்தும் தன்மாத்திரைகள் எனப்பெறும்.

(11) செவி (12) தோல் (13) கண்
(14) நாக்கு (15) மூக்கு

இவை ஐந்தும் ஞானேந்திரியங்கள் எனப்பெறும்.

(16) வாய் (17) கால் (18) கை
(19) எருவாய் (20) கருவாய்

இவை ஐந்தும் கன்மேந்திரியங்கள் எனப் பெறும்.

(21-1) மனம் (21-2) சித்தம் (22) புத்தி
(23) ஆங்காரம்

என அந்தக்கரணங்கள் நான்கு ஆகும்.

அந்தக்கரணங்களில் ஒன்றான சித்தம் மனத்தில் அடங்கும். எனவே **குணம்** - 24ஆம் தத்துவமாகக் கொள்ளப் பெறும். ஆகப் பிரகிருதிமாயா தத்துவங்கள் இருபத்து நான்காகும்.

சுத்தமாயா தத்துவங்கள் ஐந்தும் சிவதத்துவமெனப் பெறும்.

சுத்தாசுத்தமாயா தத்துவம் (மிச்சிரம் - கலப்பு) ஏழும் வித்தியா தத்துவமெனப்பெறும்.

பிரகிருதி மாயா தத்துவம் இருபத்து நான்கும் ஆன்ம தத்துவமெனப்பெறும். மொத்தம் உள்ள தத்துவங்கள் முப்பத்தாறாகும்.

---

***குறிப்பு: சித்தம் அந்தக்கரணங்களில் ஒன்றாகக் கருதப் பெற்றும் ஒரு தத்துவமாகக் கொள்ளப்பெறுவதில்லை. மனத் தின் விரிவே, அதனுள் அடங்கும்.***



# 2. பிரகிருதி மாயா தத்துவங்கள்

பிரகிருதி மாயை இருபத்து நான்கு தத்துவங்களால் ஆனது என மேலே கூறப்பெற்றது. பிரகிருதி மாயையில் எமக்கு புலனாவன ஐம்பெரும்பூதத் தத்துவங்களாகும். நிலம், நீர், தீ, வளி, விசும்பு - என்பன நமக்குத் தெரிந்த, அளவிலும், பார்க்கப் பரந்து கிடக்கின்றன.

**நிலனொடு நீரே**

செவ்வாய் மண்டலத்திலும், சந்திர மண்டலத்திலும் பூமியைப் போல் மண் உள்ளது. மண் தத்துவம் பரந்த நிலமாக உயிர் இனங்களையும், தாங்கிக் கொண்டிருக்கிறது. கல், மலை முதலியவையும், இரும்பு, வெள்ளி, ஈயம், தங்கம் ஆகியவை யும் நிலத்தைச் சார்ந்தவையாகும்.

கடல்நீர்,ஊற்றுநீர், மழைநீர், ஆற்றுநீர் முதலியவை யும் பல்வேறு வகையான திரவங்களும் நீர்த்தத்துவத்தைச் சார்ந்தவை ஆகும்.

**ஒளியோடு வளியே**

மின் ஆற்றல், நெருப்பு, பல்வேறு ஒளிகள் தீத் தத்து வத்தைச் சார்ந்தவை.

பிராண வாயு, கரியமில வாயு, நீரக வாயு முதலிய

அனைத்து வாயுக்களும் வளித்தத்துவத்தைச் சார்ந்தவை.

**வந்துபோம் வானே**

மேலே தோன்றும் பரவெளியும் பொருள்களில் உள்ள இடைவெளிகளும் ஆகாயத் தத்துவமாகும். ஆகாயத் தத்து வத்தை ஒருபூதமாக ஒப்புக்கொள்ளாத சில சமயங்கள் உள்ளன. அவற்றின் கூற்று வெளி என்ற பருப்பொருள் இன்மை - சூனியம் எனவே அது பொருளாகாது என்பது.

**இல்லது பிறவாது**

இன்மையிலிருந்து எதுவும் உண்டாகாது. உள்ளதி லிருந்துதான் எதுவும் உண்டாகும். இது சைவசித் தாந்தமும், இன்றைய விஞ்ஞானமும் கூறும் பேருண்மை.

ஒலி உண்டாவதற்கு வெளியின் இருப்பு இன்றி யமையாதது. இன்னும் பல காரியங்களுக்கும் பொருள்களு க்கும் வெளி- இருப்பானது. எனவே அஃது ஒரு பொருளா கவே கொள்ளப்பெற வேண்டும்.

**நாத தத்துவம்**

நாததத்துவம் உலகத் தோற்றத்திற்கு மூலமானது. அது ''ஒலி'' வடிவினது. அதனை இறைவற்கு முரசாகவும், தமருக மாகவும், நாதப்பெரும்பறை என்றும் கூறுவர்.

பூமலி கற்பகப் புத்தேள் வைப்பும்
நாமநீர் வரப்பில் நானில வளாகமும்
ஏனைய புவனமும் எண்ணீங் குயிரும்
தானே வகுத்ததுன் தமருகக் கரமே''

**=சிதம்பர மும்மணிக்கோவை**

எனவே நாததத்துவம் ''ஒலி'' உலகத்தோற்றத்திற்கு



மூலமானது.

--------------

*Note:* Edwin Hubble from California U.S.A., an ex athlete and ex-boxer, had given up a promising career in law, in order to study the Heavens. In 1923 Edwin Hubble had made the outstanding astronomical discovery of the century. "The entire universe was expanding, it's constituent galaxies flying apart like cosmic shrapnel". He had also proposed that there must be a beginning to TIME, that although the universe was old, it had not existed forever. By imagining the expansion running backwards like a movie in reverse, astronomers now deduce that the universe came into existence in the Big Bang about fifteen thousand million years ago.

"If the Big Bang was an explosion it was an explosion unlike any other. For one thing, when a bomb goes off, shrapnel is blown outwards into a void that already exists - the surrounding air. But no such void existed before the Big Bang. There was literally nothing. This Big Bang created every thing that included empty space, matter and even "TIME"

- After *Glow of Creation* by Marcus Chown(1983)

Marcus Chown graduated from the University of London in 1980 with a First Class Degree in Physics. Four years later he gained a Master of Science in Astrophysics from the California Institue of Technology. He is the Science Editor of *New Scientist*, a freelance writer for the *Guardian* and broad caster for the *B.B.C. World Service.*

### வானத்து இயல்

எட்வின் கபிள் அமெரிக்க வானியல் விஞ்ஞானி; கலிபோர்னியாவிலுள்ளவர். அவர் உடற் பயிற்சி வல்லுனர்: மற்றும் குத்துச் சண்டைக்காரர். அத்துடன் மேன்மையான எதிர்காலத்தைத் தோற்றுவிக்கும் சட்டத்தரணி. இவை அனைத்தையும் துறந்து வான் இயல் விஞ்ஞானத்துறையில் ஈடுபாடு கொண்டனர்.

### நூற்றொரு கோடியின் மேற்பட விரிவு

1923 ஆம் ஆண்டில் 20 ஆம் நூற்றாண்டுக்கே முக்கியமான மிகப் பெரிய கண்டுபிடிப்பை வானியல் துறையில் செய்துள்ளார். உலகனைத்தும் தோற்றமான நேரத்திலிருந்தே விரிந்தபடி இருக்கின்றது. ஆகாயத்திலுள்ள நட்சத்திரக் கூட்டமான பால் வீதி மண்ட லங்கள் இவரது கண்டுபிடிப்பு. குண்டுவெடிப்பதால் சிதறும் பெரு வெளித் துணுக்குகள் போல் அதிவேகமாகப் பறக்கின்றன. மேலும் காலதத்துவமும் பழமையான இவ்வுலகமும் நித்திய மானவையல்ல. அவற்றிற்குத் தொடக்கம் உள்ளது என்றும் இவர் கண்டு பிடித்தார்.

### பேரியல் அதிர்வுப் பிறக்கம்

வானியல் விஞ்ஞானிகள் உலகங்கள் விரிவதை எதிரிடையாகச் சுழன்று ஓடும் சினிமாப்படம்போலக் கற்பனை செய்து கணித்ததின் முடிவாக உலகம் ஓர் பேர் அதிர் வெடிச் சத்தத்திலிருந்து தொடங்கினதென்றனர்.

இந்த நிகழ்ச்சி நடந்த காலம் பதினாயிரம் நூறு கோடி ஆண்டுகள் ஆகும்.

மேலே கூறப்பட்ட பேர் அதிர்வெடி மற்றவை போன்



றது அன்று. அது ஒரு விந்தையானது. ஒரு குண்டு வெடிக்கும் பொழுது அதிலிருந்து சிதறிப் பறக்கும் துணுக்குகள் ஏற்கனவே உள்ள வெற்றிட வெளியை நாடுகின்றன - காற்று மத்தியில்.

ஆனால் உலகத் தோற்றத்தைச் செய்யும் பேர் அதிர் வெடி நடந்தபோது எவ்வித வெற்றிட வெளியும் இல்லை. இன்னும் கூறப்போனால் பேர் அதிர் வெடிக்கு முன் ஒன்றுமே இல்லை - சூனியம். காலத்தத்துவம், ஆகாயம், ஆகியவை உட்பட்ட அனைத்தையும் இப்பேர் அதிர்வெடியே உண்டு பண்ணினது.

### குணக் குவை - தன்மாத்திரைகள் (5)

''தன்மாத்திரை'' என்றால் தன் அளவில் குணங்கள் வெளிப்படாமல் நிற்பது என்பது பொருள். சைவசித்தாந் தத்தில் குணங்களின் தொகுதி-பொருள் எனக் கூறப்படும். தன்மாத்திரை அனைத்தும் குணங்களின் தொகுதி ஆதலால் அவை பொருட்களாகின்றன. சூக்கும நிலையிலுள்ளவை.

'தன்மாத்திரைகள், ஐம்பெரும் பூதங்களைச் சார்ந்தவை. மண் தத்துவத்திற்குத் தன்மாத்திரை' ''நாற்றம்'' ஆகும். நீர்த் தத்துவத்திற்கு தன் மாத்திரை ''சுவை''. தீக்குத் தன்மாத்திரை ''ஒளி'', வளிக்குத் தன்மாத்திரை ''பரிசம்'' (ஊறு). ஆகாயத் திற்குத் தன்மாத்திரை ''ஒலி''.

### தூலம் - சூக்குமம்

எந்த ஒரு தூலப் பொருளுக்கும் சூக்குமநிலை உண்டு என்பது சைவ சித்தாந்தக் கூற்று. எனவே தன்மாத்திரைகள் பஞ்சபூதங்களுக்குச் சூக்கும நிலையாகும்.

### ஞானேந்திரியங்கள் ஐந்து

காது, கண், தோல், நாக்கு, மூக்கு என்னும் ஐந்தும் ஞானேந்திரிய தத்துவங்கள். இவை எம் உடலின்கண் உள்ள அறிவிற்குரிய கருவிகளாகும். இவை அறி கருவிகள். இந்த ஐந்து கருவிகளும் முறையே ஓசை, பரிசம், ஒளி, சுவை, நாற்றம் என்னும் ஐந்தையும் உயிர் அறிவதற்குக் கருவியாகப் பயன்படும்.

சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்ற ஐந்தின்
வகை தெரிவான் கட்டே உலகு

=திருக்குறள் 27

காது ஒலியைக் கேட்கிறது. தோல் பரிச (தொடுதல்) உணர்வை அறிகிறது. கண் பொருட்களைக் காண்கிறது. நாக்கு சுவையை அறிகிறது. மூக்கு மணத்தை மோக்கிறது. காது, தோல், கண், நாக்கு, மூக்கு ஆகியவை பொறிகள் என்றும், அவை அறிகின்றவற்றைப் ''புலன்கள்'' என்றும் கூறுவர். இப்பொறிகள் தாமே புலன்களை அறியமாட்டா. இப்பொறிகளின் வேறாய் இவற்றை அதிட்டித்து நிற்கும் உள் இந்திரியங்கள் ஐந்து உண்டு. ஆனால் அவ்விந்திரியங்கள் செயல்பட இப்பொறிகளும் நல்நிலையில் இருக்க வேண்டுமாதலால் இரண்டும் சேர்த்தே ஞானேந்திரியங்கள் என்று கொள்ளப்பெறுகிறது.

### தொழில்படுத்துந (5) - கன்மேந்திரியங்கள்

வாய், கால், கை, எருவாய், கருவாய் ஆகிய ஐந்தும் கன்மேந்திரியங்கள் எனப்படும். இவை தொழிற்கருவிகள், இக்கருவிகள் உயிர் தொழிற்படுவதற்குப் பயன்படும். வாய் பேசும்; கால் நடக்கும்; கை இந்திரியம் கொடுக்கும் வாங்கும்;



கை இந்திரியம் உடலில் உள்ள மற்றப்பாகங்களிலும் விரவி நிற்கும். கண் இமைத்தல், புருவம் நெறித்தல் முதலியன கை இந்திரியத்தின் தொழிற்பாடாகவே கொள்ளப்படும். எருவாய் மலம் கழிக்கும். கருவாய் இனப்பெருக்கம் செய்யும். சிறுநீர் கழிக்கும்.

நாக்கு சுவை அறிவதால் ஞானேந்திரியமாயிற்று. அதே நாக்கு பேசும் கருவியாகவுமுள்ளது. வாயாகிய இடை வெளி இல்லாது நாக்கால் பேச முடியாது. நாக்கில்லாமல் வாயால் பேச முடியாது. எனவே நாக்கையும் வாயையும் சேர்த்தே 'வாய்' என்பர் இக் கன்மேந்திரியம் தனித் தத்துவமாகிறது.

### காண்பரிது ஆய உள் உள கருவிகள்

மனம் - புத்தி, சித்தம்,ஆங்காரம் ஆகிய நான்கும் அந்தக்கரணங்கள். அந்தக்கரணங்கள் என்றால் உட்கருவி கள் என்று பொருள். கண், காது, மூக்கு, தோல், நாக்கு ஆகிய ஞானேந்திரியங்களும் கை, கால், வாய், எருவாய், கருவாய் ஆகிய கன்மேந்திரியங்களும் புறத்தே இருப்பதால் எம்மால் நன்கு அறிய முடிகிறது. அந்தக்கரணங்கள் உள்ளே உள்ள சூக்குமக் கருவிகள், ஆதலால் அவற்றைப் பார்க்க முடியாது. ஆனால் எமது அனுபவ உணர்வுக்குப் புலனாகிறது. கடையில் ஒருபொருள் இருப்பதைக் கண்பார்க்கிறது. அது தோடம் பழமாக இருக்குமோ? வேறு நாரத்தைப் பழமாக இருக்குமா? என்று எமது மனம் சங்கற்ப, விகற்பம் செய்கிறது.

### ஊக்கத்தின் ஊக்கி

தோடம்பழமாயிருந்தால் வாங்கிச் சாப்பிடலாமே என்னும் விருப்பமும் உண்டாகும். இவ்வாறு சந்தேகப்

படுதலும் விரும்புதலும் *மனம்* என்னும் அந்தக்கரணத்தின் செயலாகும். பார்த்த பொருளை ''இன்னது என அறிந்து வாங்க முயல்வேன்'' என்னும் ஓர் எழுச்சி நம்மிடையே தோன்றுகிறது. இந்த எழுச்சிதான் ஆங்காரத் தத்துவமாகும். எந்த ஒரு முயற்சிக்கும் ஆங்காரத் தத்துவத்தின் ஒன்றுபட்ட எழுச்சி வேண்டும். முனைப்போடு செயலாற்றத் துணிவது ஆங்காரத்தத்துவத்தின் தொழிற்பாடாகும்.

**நிச்சய, நிர்ணயம்**

புத்தித்தத்துவம் தான் கண்ட பொருளைத் தோடம் பழம் தான் என நிச்சயிக்கிறது. இவ்வாறு நிர்ண யிப்பதும் புத்தித்தத்துவத்தின் செயல்பாடாகும்.

**சுவை**

நாம் தோடம்பழத்தை எடுத்து சாப்பிடும்போது புத்திதத்துவம் அந்தத் தோடம்பழத்தின் உணர்வாகத்தான் அதைச் சுவைத்து அனுபவிக்கிறது.

புத்திதத்துவத்தின் நல்லதும் தீயதும் ஆகிய நினைவுகள் எட்டுப் பாவங்களாகக் கூறப்படும்

| **நல்லவை** | **அல்லவை** |
|---|---|
| அறம் | மறம் |
| அறிவு | அறியாமை |
| செல்வம் | வறுமை |
| பற்றின்மை | பற்று |

'அல்லவை தேய அறம் பெருகும்.

=திருக்குறள் 96



**உழலத் தகுமோ**

இப்பாவங்கள் புத்தியில் சுழற்சியதாக ஒன்றன்பின் ஒன்றாக வரும். நாம் இவற்றில் அகப்பட்டு உழல்கின்றோம். ''அளவிலாப் பாவகத்தால் அமுக்குண்டு'' என மணிவாசகப் பெருமான் கூறினது குறிப்பிடத்தக்கது.

நாம் பார்த்து, கேட்ட பொருட்களையும் கருத்து களையும் எமது சித்தம் பதியவைத்துக் கொண்டு வாய்ப்பு நேரும்பொழுதெல்லாம் நினைவூட்டும். இதனால் சித்தம் இன்ப துன்ப அனுபவங்களை நினைத்து நினைத்துச் சிந்தனை செய்யும் கருவியாகிறது. பொதுவாகச் சித்தத்தை நினைவுக் கருவி என அறிதல் வேண்டும் (Faculty of Memory).

மேற்கண்ட கருவிகள் வெவ்வேறு செயல்களைச் செய்வதால் அவை ஒரே கருவியாக இருக்கமுடியாதென்றும் செயல்பாட்டால் அவை தனித் தனியே உள்ள நான்கு (ஆனால் சித்தம் மனத்தில் அடங்கும் என்பது முன்னமே கூறப் பெற்றுளது) கருவிகள்என்று சைவசித்தாந்தம்கூறுகிறது.

# 3. சித்தம்

**சிவஞான சித்தியார் - மாபாடியம்**

சிவஞானசித்தியார் சைவசித்தாந்தக் கொள்கைக்கு ஓர் உரையாணியாகும். அவ்வரியநூற்கு மாபாடிய காரராகிய மாதவச்சிவஞான முனிவர் அருளிச்செய்த பொழிப்புரையே மிகச் சிறந்தது. சைவ சித்தாந்தக் கோட்பாட்டுக்குச் மாதவச்சிவஞான முனிவர் மற்றும் யாழ்ப்பாணம் நல்லூர் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலர் விளக்கங்களே வரையறையான ஆதாரங்களாகக் கருதப்படுகின்றன.

மேற்கூறிய பொழிப்புரையைத் தழுவி, திருவாவடு துறையாதீன 16 ஆவது மகாசந்நிதானமாய் இருந்த ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக சுவாமிகள் பதவுரை இயற்றியுள்ளனர்.

**மூவகை ஆங்காரம்**

ஆங்காரத்தத்துவம் மற்றை தத்துவங்கள் போல ஆன்மா விற்குக் கருவியாய் அமைவதே.

இவ்வாங்காரம் சாத்துவிகம் மிகுந்து ஏனை இரண்டும் குறைந்த நிலையில் தைசத ஆங்காரம் என்றும், இராசதம் மிகுந்து ஏனை இரண்டும் குறைந்த நிலையில் வைகரி ஆங்காரம் என்றும் தாமதம் மிகுந்து ஏனையிரண்டும் குறைந்த நிலையில் பூதாதி ஆங்காரம் என்றும் பெயர் பெற்று



மூவகைப்படும்.

**தைசத ஆங்காரத்திலிருந்து மனம் தோன்றும்.**

ஐம்பொறிகளின் வாயிலாகப் பொதுமையால் அறியப்பட்ட பொருளில் சங்கற்பம் விகற்பம் இரண்டும் நிகழ்வதற்குக் கருவியாய் அமைந்தது மனம்.

சங்கற்பம் என்பது எதிர்ப்பட்ட பொருளை ''இது யாதாகும்?'' என்று எண்ணிப் பார்ப்பது. அதன்பின்னர் ஏற்கனவே அறிந்து, அனுபவித்த நினைவின் அடிப்படையில் ''இது இன்ன பொருளாகத் தான் இருக்க வேண்டும்'' என்னும் நினைவு.

விகற்பம் என்பது அவ்வாறு நினைத்த பின்னர் இது இன்னது தானோ? அன்றோ? என எழுகின்ற ஐயம்.

''எதிரே தோன்றும் பொருள் யாது என்ற நினைவிற்கு நிருவிகற்பக் காட்சி மாத்திரமே காரணம். இன்னதாகும் என்னும் சங்கற்ப நினைவிற்குத் தூக்கிச் சிந்திக்கும் நினைவின் பின் வெளிப்படும் வாதனை காரணம். இவ்விருவகை நினைவும் காலமாத்திரையான் அன்றிக் காரணத்தாலும் தம்முள் வேறுபாடு உடைமையின், இவ்விரண்டிற்கும் மனம் ஒன்றே கருவியாதல் பொருந்தாது எனின் - அது ஒக்கும். அங்ஙனமாயினும் பயனால் வேறுபாடு இன்மையின், மனமே அவத்தை விசேடத்தால் சித்தம் என்னும் விருத்திப்பட்டு நின்று அங்ஙனம் தூக்கிச் சிந்திக்கும் என்று காண்க'' மேற்கூறிய மாதவச் சிவஞான முனிவர் கூற்று.

மேலும் மாதவச் சிவஞான முனிவர் கூறுவது பின் வருமாறு ''இதனானே மனத்தின் விருத்தியாகிய சித்தம் ஒன்று உண்டு என்பது பெற்றாம். அஃது ஏனைத் தத்துவங் களைப்போலப் பரிணாமம் அன்மையின், மனத்தின் வேறாக வைக்கற்பாற்று அன்று என்னும் கருத்தால், 'சிந்தை நினைவு

ஐயம் வந்து தரும் மனம் ஒழிய வகுப்பு ஒணாதே' (*சிவப்பிரகாசம்*-43) என்றார் புடைநூல் ஆசிரியரும். 'சிந்தை, நினைவு, ஐயம் வரும்' என்பதனைச் 'சிந்தை நினைவு வந்து ஐயம் தரும்' என மாறுக. 'சிந்தை நினைவு ஐயம் தருதலாவது, சித்தத்தின் தொழிற்பாடாகிய அங்ஙனம் தூக்கி எண்ணும் நினைவு நிகழ்ந்து வாதனையை வெளிப் படுத்து முகத்தான் ஐயநினைவைத் தோற்றுவித்தல்''

**சித்தம் இல் என்பார்**

''இஃது அறியாதார் அந்தக்கரணம் மூன்று எனத்தொகை கொண்டு, சித்தம் என்பது ஒன்றில்லை என்பர். சித்தமில்லையாயிற் கண்கண்ட பொருள் எல்லாவற்றிலும் சங்கற்ப, விகற்பம் நிகழ்தல் வேண்டும். அங்ஙனம் நிகழா மைக்குக் காரணம் வேறு இன்மையின், நிருவிகற்பமாய் கண்ட பொருள் பலவற்றுள்ளும், ''இஃது யாதாகற்பாற்று?' என ஒன் றனைத் தூக்கி எடுத்து தன் காரணமாகிய மனத் திற்குக் கொடுக்குங் கருவியாகிய சித்தம் ஒரு தலையான் வேண்டப்படுமாறு அறிக. ஆண்டு அறிதல் வேட்கையே காரணம் எனின், - கெட்ட பொருளைத் தேடி நெறிச் செல்வோனுக்கு நெறி யிடைக்கண்ட பொருள்களின் அறிதல் வேட்கை காரணம் அன்மையானும், ஆண்டுக் கன்மம் காரணம் எனின், கன்மம் கருவித் துணையாதல் இன்றித் தானே காரணமாகாது என்பதும் மேற்காட்டினாம் ஆக லானும், வேறுகாரணம் இன்மை யானும் ஆண்டு மனத்தின் அவற்றை விசேடமாகிய சித்தமே காரணம் எனக் கொள்க''.

அற்றேல் வழி நூலாசிரியர், ''சித்தமாம் அவ்வியத்தம் சிந்தனை அதுவும் செய்யும்'' (*சிவஞான சித்தியார்* 148) எனச் சித்தத்தை அவ்வியத்தின் அவத்தை விசேடமாக வைத்து



ஓதியது. 'மனம் ஒழிய வகுப்பு ஒணாதே' என்று ஓதியதனோடு முரணும் பிற எனின் - முரணாது; அவ் வியத்தின் காரணமாகிய அந்தக் கரணங்களும் அவ்வியத்தம் என்று உபசரித்துக் கூறப்படும் என்னும் கருத்தான் அவ்வாறு கூறினார் என்க. அற்றாயினும், சிவப்பிரகாசத்தில் கூறுமாறு போலச் சித்தத்தை மனத்தின் பின் வைத்து ஓதாது குண தத்துவத்தைச் சாரவைத்து ஓதியது மலைவாம்; பிறவெனின் ஆகாது, செய்யுளாகலின் அங்ஙனம் முறை பிறழவைத்தார் என்க''. 'அந்தமனம் புத்தியுடன் ஆங்காரம்' (*உண்மை விளக்கம்* 17) என்ற தொடக்கத்து நூல்களில் மனம் ஆங் காரங்கட்கு இடையே புத்தியை வைத்ததும் அவ்வாறு எனக் காண்க''.

விளக்கம்: சித்தம் என்பது தூக்கி என்னும் நினைவு நிகழ்ந்து, ஐய நினைவைத் தோற்றுவிக்கும். மனத்தின் வேறாகச் சித்தம் ஒன்று உண்டு எனினும், அதனை மனத்தின் வேறாக வைத்து வகுத்துக் கூற ஒண்ணாதது என்பதாம்.

**இறுதியில் அமைந்தவர் ஈறில் சிறப்பினர்**

உமாபதிசிவசாரியர் மெய்கண்ட தேவர் வழிவந்த சைவசித்தாந்த சந்தானாசாரியர்கள் நால்வரில் கடைசியாக உள்ளவர்- இவர்கள் புறச்சந்தானாசாரியர் என்று கூறப் பெறுவர். பரஞ்சோதி முனிவர் வழிவந்தவர்கள்.

தட்சிணா மூர்த்தி வழிவந்த நால்வர்.

(1)திருநந்திதேவர் (2)சனற்குமாரர்
(3)சத்தியஞானதரிசனிகள் (4)பரஞ்சோதிமுனிவர்- இவர்கள் அகச்சந்தானாசாரியர்.

**தில்லை வாழ் அந்தணர்**

உமாபதிசிவாசாரியர் தமது முன்னோர்களான

மெய்கண்ட தேவர், அருணந்தி சிவாசாரியர், மறைஞான சம்பந்தர் போன்று, தம்மளவில் மெய்யுணர்வின் முற்றுப் பேறுடையராய் விளங்கினார். அவர்களைப்போல் அருளாளர், சீவன் முத்தர்.

உமாபதி சிவசாரியர் சுந்தரரால் திருத்தொண்டத் தொகையில் போற்றப்பெற்ற தில்லைவாழ் அந்தணர் மரபு வழியில் அவதரித்தவர். இவர்கள் தெய்விகத் தன்மை உள்ளவர்கள். தில்லை நடராசப் பெருமான் திருமேனியை முப்போதும் தீண்டுவதற்கு உரிமை உள்ளவர். தில்லைவாழ் அந்தணர்களில் மிகச் சிறந்தவர். தில்லைக் கோயிலுக்கு உரியவர்களில் இவரும் ஒருவர். சைவசித்தாந்த நூல்கள் பதினான்கு. இவற்றுள் எட்டுநூல்கள் இவரால் இயற்றப் பெற்றவை. முக்கியமானவை *சிவப்பிரகாசம், திருவருட் பயன்* என்பன.

### புராணம் செய்தவர்

மறைந்திருந்த தேவாரத் திருவேடுகளைக் கண்டெடுத்ததும் அவற்றிற்கு முன் போலப் பண் அமைத்ததும் திரு முறைகளைப் பன்னிரண்டாக வகுத்ததும் பெரியவரலாறுகள். இவ்வரலாறுகளைக் கூறுகின்ற *திருமுறை கண்டபுராணம், சேக்கிழார் புராணம்* இரண்டையும் உமாபதி சிவாசாரியர் அருளினர் என்பது வரலாறு. இவர் காலம் கிபி 1300-1380 ஆகும். *(மு. அருணாசலம் - ஆசிரியர் - ஒன்பதாம் திருமுறை, திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, சென்னை பல்கலைக் கழக வெளியீடு 1974.)*

### பெற்றான் சாம்பான் - முத்தி

பெற்றான் சாம்பான் என்பவன் புலையன்; அவன் உமாபதி சிவாசாரியர் அவர்கள் திருமடத்துக்கு வழக்கமாக



விறகு கொடுப்பவன்; சிவ பத்தியில் சிறந்தவன். அவன் முத்தி நிலை அடைவதற்குப் பக்குவம் பெற்றிருந்த நிலையை உணர்ந்த உமாபதி சிவாசாரியர் சாதிக் கட்டுப்பாடுகளை மீறி அவனுக்குத்தீக்கை வழங்கி முத்தி அடையச் செய்தனர். அது போன்று முள்ளிச்செடி ஒன்றிலுள்ள ஆத்மாவும் முத்தி அடையும் நிலையில் இருந்ததை அறிந்து அதற்கும் தீக்கை அளித்து முத்தி அடைவதற்கு ஏதுவாய் இருந்தனர்.

### சார்பு நூல்

உமாபதிசிவம் இயற்றிய *சிவப்பிரகாசம், சிவஞான போதத்திற்குச்* சார்பு நூலாகும். *சித்தியார் சிவஞான போதத்திற்கு* வழிநூலாகும். உமாபதிசிவம் அருளாளர். எனவே யோகக் காட்சி அவருக்குச் சித்திக்கும். அவர் கூறுவதை மறுப்பதற்குப் பெத்த நிலையிலுள்ள எம்மனோர் தகுதி அற்றவர்கள்.

யாழ்ப்பாணம்- புலோலியூர் சு. சிவபாதசுந்தரனார் 20 ஆம் நூற்றாண்டின் முதற்பகுதியில் வாழ்ந்த சைவ சித்தாந்தப் பேரறிஞர். இவர் யாழ்ப்பாணம் நல்லூர் ஸ்ரீ ல ஸ்ரீ ஆறுமுக நாவலர் அவர்கள் சைவ மரபு வழி வந்தவர்.

சந்தானாசாரியர்களுள் நான்காமவராய் விளங்கிய உமாபதிசிவாசாரியர் அவர்களே *சிவப்பிரகாசம், திருவருட் பயன், வினாவெண்பா, போற்றிப் பஃறொடை, கொடிக்கவி, நெஞ்சுவிடுதூது, உண்மைநெறி விளக்கம், சங்கற்ப நிராகரணம்* ஆகிய எட்டு நூல்களை அருளிச்செய்துள்ளார். அவை; '*சித்தாந்த அட்டகம்*' எனப் பெறும். (அட்டகம் - எட்டு)

இச்சித்தாந்த அட்டகத்தில் இரண்டாவதாய் எண்ணப் படுவது' *திருவருட்பயன்*'. இவ்வரிய நூற்கு, சு.சிவபாத சுந்தரனார் சிறந்த உரை எழுதியுள்ளனர்.

இன்னும், "*The Saiva School of Hindusim*" என்ற சிறந்த நூலை ஆங்கிலத்தில் இயற்றியுள்ளார். இந்நூலில் *சித்தம்* 36 தத்துவங்களில் ஒன்றாகக் கொள்ளப் பெறவில்லை (Vide: The Table I, page 87 of *'The Saiva School of Hindusim'*).



# 4. பிரகிருதி மாயை

மேலே கண்ட இருபத்து நான்கு ஆன்ம தத்துவங்களும் பிரகிருதி மாயையிலிருந்து தோன்றும். இவற்றைச் சிவபெருமான் சீகண்ட ருத்திரர் வாயிலாகத் தோற்றுவிப்பார்.

அசுத்தமாயையின் காரியமாகிய கலையினின்றும் பிரகிருதி மாயை தோன்றும்.

## அவ்வியத்தம்

இதனை ''மூலப்பகுதி'' என்றும் ''மூலப்பிரகிருதி'' என்றும் 'மான்' என்றும் கூறுவதுண்டு. இதன்கண் சத்துவம், இராசதம், தாமதம் என்னும் முக்குணங்களும் தோன்றும். முக்குணங்களும் வெளிப்படாது அடங்கி நிற்கும் நிலையே மூலப்பிரகிருதி ஆகும். இதற்கு அவ்வியத்தம் என்றும் பெயர். முக்குணங்களும் வெளிப்பட்டுத் தம்முள் சமமாய் இருக்கும். நிலைக்குக் ''குணதத்துவம்'' என்று பெயர்.

## தத்துவத் தோற்றம்

முக்குணங்களுள் ஒன்றைவிட ஒன்று மிகும்பொழுது மேலே கண்ட இருபத்துநாலு (24) தத்துவங்களும் தோன்றும். மேலே கண்டவாறு பூதம் ஐந்து. தன்மாத்திரை ஐந்து, ஞானேந்திரியம் ஐந்து கன்மேந்திரியம் ஐந்து. அந்தக் கரணம்

மூன்று குணதத்துவம் ஒன்று என ஆன்ம தத்துவம் இருபத்து நான்கு என்பது தான் சைவசித்தாந்தக் கொள்கை.

### குணம் ஒரு மூன்றும்

குணதத்துவம் - சத்துவகுணம், இராசதகுணம், தாமத குணம் ஆகிய மூன்றும் ஏனைய ஆன்மதத்துவம் இருபத்தி மூன்றிலும் கலந்து நிற்கும். உலகம் முக்குணமயம் எனச் சொல்லப்படுகிறது. ''உதாரணமாகக் காற்று இளம் தென்றலாக வீசும்போது சத்துவ குணத்தோடு அது கலந்து நிற்கிறது. காற்றே வீசாமல் மந்தநிலையில் இருக்கும்போது தாமத குணத்தோடு அது கலந்து நிற்கிறது. இவ்வாறு ஒவ்வொரு தத்துவத்திலும் அவ்வப்போது காணப்படும் குணநிலையை வைத்து இந்த குண வயப்பட்டிருக்கிறதென அறிந்து கொள்ளலாம்.

### வித்தியா தத்துவம்

சுத்தாசுத்தமாயா கருவிகள்:

1. காலம்
2. நியதி
3. கலை
4. வித்தை
5. அராகம்
6. புருடன்
7. மாயை

எனச் சுத்தாசுத்தமாயா தத்துவங்கள் ஏழும் ஆகும். இவற்றை வித்தியா தத்துவங்களென்றும் சொல்லுவர். இவை வித்தைக்கு அல்லது அறிவிற்குரிய தத்துவங்கள்.

ஈற்றில் அமைந்த மாயை - காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன் ஆகியவற்றிற்குக் காரணமாக விளங்குவதால் அதனைக் காரியத்துள்ள ஏனைய தத்துவங்களுடன் சேர்க்காமல் கடைசியாகத் தனியாக வைக்கப் பெற்றுள்ளது.



# 5. காலம்

### இன்றியமையா இயல்பிற்று-காலம்

காலத்தைக் கண்ணால் காண முடியாது. ஆனால் அனுபவத்தால் உணரலாம். இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம், எனக் காலத்தை மூவகையாக உணர்கிறோம்.

காலம், என ஒரு பொருள் இல்லையென்றும், தொழிற்பாட்டில் தொடக்கம், நடு, இறுதி ஆகியவை காலமாகக் கணக்கிட்டுச் சொல்லப்படுகின்றன என்றும் சில சமயங்கள் கூறுகின்றன.

மேலே கண்டவாறு காலத் தத்துவம் நித்தியமானது அன்று. அதற்கு தொடக்கமும் இறுதியுமுண்டு, என்பது சைவசித்தாந்தக் கொள்கையும், இன்றைய விஞ்ஞான முடிவும் ஆகும். இன்னும் காலம் பூரணமான சார்பற்ற பொருளன்று. காலமும் வெளியும் என்றுமே பிரிக்கப்படாதவை என்று பேராசிரியர் ஐயின்ஸ்ரயின் சார்ச்சியின் தத்துவம், (Theory of Relativity of Einstein) கூறுகிறது.

### உம்மைப் பயன் கொல்?

சென்ற பிறவிகளில் நாம் எத்தனையோ நல்வினை தீவினைகளைச் செய்திருக்கிறோம். அவ்வினைகளின் பயன்களை நாம் இப் பிறவியில் எவ்வளவு காலம் அனுபவிக்க வேண்டும்? எப்பொழுது அனுபவிக்க வேண்டும்? என்பதைக் காலம் தான் நிர்ணயம் செய்கிறது. எனவே கால

தத்துவம் இன்றியமையாதது.

-----------

*Note.* Einstein strongly believed in nature's inherent harmony and his deepest concern throughout his Scientific life was to find a unified foundation of Physics. He began to move towards this goal by constructing a common framework for electro-dynamics and mechanics, the two seperate theories of classical physics. This framework is known as the special theory of relativity. It unified and completed the structure of classical physics, but at the same time it involved drastic changes in the traditional concepts of space and time and undermined one of the foundations of the Newtonean world view.

According to relativity theory, space is not three dimensional and time is not a separate entity. Both are intimately connected and form a four-dimensional continuum *space-time* In relativity theory, therefore, we can never talk about space without talking about time and vice versa. Furthermore, there is no universal flow of time as in the Newtonean model. Different observers will order events differently in Time if they move with different velocities relative to the observed events. In such a case, two events which are seen as occurring simultaneously by one observer may occur in different temporal sequences for other observers. All measurments involving space and time thus lose their absolute significance. In relativity, theory, the Newtonean concept of an absolute space as the stage of physical phenomena is abandoned and so is the concept of an absolute time. Both space and time become merely elements of the language a particular observer uses for describing the observed phenomena.



The concept of Space and Time are so basic for the description of natural phenomena that their modifications entail a modification of the whole framework that we use to describe nature. The most important consequence of this modification is the realization that mass is nothing but a form of energy. Even an object at rest has energy stored in its mass, and the relation between the two is given by the famous equation $E = M \times C^2$ being the speed of light. Vide pages 71&72- *The Tao of Physics* - Frijof Capra

**சார்ச்சியின் சிறப்புக் கொள்கை**

உலகப் புகழ்பெற்ற சிந்தனையாளரும் விஞ்ஞானியுமான பேராசிரியர் ஐயின்ஸ்ரயின் அவர்கள் இயற்கையின் ஒத்திசைவில் உறுதியான நம்பிக்கை உள்ளவராக இருந்தனர். பௌதிகவியலில் ஒருப்படுத்திய ஒரு அடிப்படைக் கட்டுக்கோப்பு காண்பதே தமது வாழ்க்கையின் குறிக்கோளாகக் கருதினார். இதற்கு வேண்டிய அணுகுமுறையை மேற்கொண்டார். மின்னியக்கவியல் (Electro-dynamics) மற்றும் நிலையியக்கவியல் (Mechanics) இவை இரண்டும் ஐதிக பௌதிகவியல் விஞ்ஞானப் பிரிவுக்ளாகும். இவற்றை ஒருங்கிணைத்து ஒரு கட்டுக்கோப்பிற்குள் கொண்டுவந்துள்ளனர்.

----------

*குறிப்பு:- இலங்கை அரசகரும மொழி வெளியீடு கலைச்சொற்றொகுதி பௌதிக விஞ்ஞானம், ''சார்ச்சியின் சிறப்புக் கொள்கை* - Special Theory of Relativity"

மேற்படி கட்டுக்கோப்பு அவரது சார்ச்சியின் சிறப்புக் கொள்கை என்று அழைக்கப்பெற்றது. இதன் விளைவு நியூற்றனின் (Newton) ஐதிக உலகியல் கொள்கை அடியோடு ஒதுக்கப்பட்டது.

சார்ச்சியின் தத்துவத்தின்படி விசும்பு முப்பரிமாணப் பொருளன்று (three dimensional).

காலமும் தனியான பொருளன்று. விசும்பும் - காலமும் மிக நெருக்கமாக ஒருங்கிணைக்கப் பெற்றவை.

விசும்பும் - காலமும் இடையறாத தொடர்ச்சியுள்ள நாற்பரிமாணப் பொருள்களாகவுள்ளன.

எனவே சார்ச்சியின் தத்துவத்தைப் பொறுத்தவரை விசும்பைப் பற்றிப் பேசும்போது காலத்தைக் குறிப்பிடாமல் இருக்கவியலாது. மறுதலையாகக் காலத்தை பற்றிப் பேசும் போது விசும்பைக் குறிப்பிடாமல் இருக்கவியலாது. நியூற்றன் (Newton) கூறியதுபோல் காலத்தின் போக்கு ஒருபடித்தாய் ( Absolute) பொதுவானதாக இருக்கவியலாது. காலத்தை ஒட்டி நிகழ்ச்சிகளைச் செயற்படுத்தி, அவற்றை நோக்கு வோருக்கு வெவ்வேறு வேகத்தில் அந்நிகழ்ச்சிகள் செயற் பாட்டால் அவை ஒருப்படித்தாய் இரா. உதாரணமாக ஒரே வேளையில் செயற்படத் தொடங்கிய இரு நிகழ்ச்சிகளின் வேகங்கள் வெவ்வேறாக இருந்தால் அவற்றின் காலப் போக்கை நோக்குவோருக்கு அவை வெவ்வேறாக இருக்கும். எனவே விசும்பு - காலம் அவற்றையொட்டிய அளவைகள் அனைத்தும் தனியான இயல்பை இழக்கின்றன.

விசும்பும், காலமும் - இயற்கையின் தோற்றப் பாட்டை நோக்குபவர்கள் அவற்றை விவரிக்க எழும் பொருள்களின் பெயர்களைக் குறிக்கும் சொற்களாகும்.

இயற்கையின் அபூர்வமான தோற்றப்பாட்டை விவரிப்பதற்கு விசும்பு - காலக் கொள்கை அடிப்படை



யானது. அவற்றை வேறுபடுத்தினால் இயற்கை விவரிக்கும் முழு திட்டத்தையும் வேறுபடுத்த வேண்டிவரும். இப்படி வேறுபடுத்தினால் அதிலிருந்து முக்கியமாக உணரப்படுவது - பிண்டத்தின் வேறு உரு பேராற்றலாகும். சும்மா இருக்கும் எந்தப்பொருளும் பிண்டத்தில் பேராற்றலின் சேமிப்பு இடமாக இருக்கும். பிண்டத்திற்கும் பேராற்றலுக்கும் உள்ள தொடர்பை $E = M \times C^2$ என்ற பிரசித்தி பெற்ற சமன்பாடு எடுத்து விளக்குகிறது. ''இதைத் தொகுத்தவர் பேராசிரியர் ஐயின்ஸ்ரயின் அவர்களே.''

**ஒளித்திறன்**

மாறிலியான ஒளியின் வேகமும் சார்ச்சியின் கொள் கைக்கு அடிப்படையானவை. ஒளியின் கதியை அணுகும் வேகங்களை உட்படுத்தும் பௌதிகத் தோற்றப்பாட்டை விவரிக்கும் பொழுதெல்லாம் சார்ச்சியின் கொள்கையும் அத னுடன் கணக்கில் எடுக்க வேண்டும். இது குறிப்பாக மின் காந்தத் தோற்றப்பாட்டுக்கு ஒப்புதலானது. இதற்கு ஒளி ஒரு உதாரணமாகும். மேலும் இது ஐயின்ஸ்ரயின் (சார்ச்சியின்) கொள்கையை உருவாக்குவதற்கு வழிவகுத்தது.

------------

*Note*: Carl Sagan - (Director of the laboratory for Planetary Studies of Cornwall University; a scientist of international repute; played a leading role in the Mariner, Viking and Voyager expeditions to planets for which he re ceived the NASA medals for exceptional scientific achieve- ment; Chairman of the Divison for Planetary Sciences of the American Astronomical Society; Chairman of the As- tronomy Section of the American Association for the Advancement of Science; President of the Planetology

Section of the American Geo - Physical Union; Editor in Chief of *Icarus*, the leading professional journal devoted to Planetary Research, author and co-author of several articles and books), in his book *Cosmos* - 1995, pages 284 - 286 - made the following observation relating to the Hindu concept of Creation and Destruction, indeed infinite in number and 'The Great Oneness' and all things evolving from the 'Oneness'.

"Every human culture rejoices in the fact that there are cycles in Nature".

"The Hindu Religion is the only one of the world's great faiths dedicated to the idea that the Cosmos itself undergoes an immense, indeed an infinite number of deaths and rebirths. It is the only religion in which the Time Scales correspond, no doubt by accident, to those of modern scientific Cosmology. It's cycles run from our ordinary day and night to a day and night of Brahma, 8.64 billion years long, longer than the age of Earth or the Sun. And there are much longer Time Scales still".

"The Chola bronzes cast in the Eleventh Century, includes several different incarnations of the God Shiva. The most elegant and sublime of these is a representation of the creation of the universe at the beginning of each Cosmic Cycle, a motif known as the Cósmic Dance of Shiva. The God called in this manifestation *NADARAJA*, the Dance king with four hands. In the upper right hand is a drum whose sound is the sound of the creation. In the upper left hand is a tongue of flame, reminder that the



Universe, now newly created, will billions of years from now be utterly destroyed.".

"These profound and lovely images are, I like to imagine, a kind of premonition of modern astronomical ideas".

"A millennium before Europeans were willing to divest themselves of the Biblical idea that the world was a few thousand years old, the Mayans were thinking of millions and Indians of billions".

**தீராச் சுழற்சி**

ஒவ்வொரு மனித இனத்தின் பண்பாடும் காலவட்டத்தின் சுழற்சிக்கும் உட்பட்டதே.

உலகத்திலுள்ள தலைசிறந்த சமயக் கொள்கைகளுள் இந்து சமயமும் ஒன்று.

இந்து சமயம் மட்டுமே உலகத்தோற்றமும் ஒடுக்கமும் எண்ணிறந்தனவென்று கூறுகிறது.

இன்னும் இந்து சமயம் மட்டுமே கூறும் கால அளவைகளும் இன்றைய அண்டமுழுமை விஞ்ஞானம் கூறும் கால அளவைகளும் ஒத்திருக்கின்றன. இது எதிர்பாராத நிகழ்ச்சி எனலாம்.

இந்து சமயம் கூறும் காலவட்டம் - இரவும் பகலும் அடங்கிய ஒரு நாள் தொடக்கம் தேவர்களின் ஒருவரான பிரமாவுக்குரிய இரவும் பகலும் 86.4நூறுகோடி ஆண்டு களாகும். இன்னும் இதற்கு மேலான காலகட்டங்களு முள்ளன.

**ஆடல் வல்லான்**

பதினொன்றாம் நூற்றாண்டில் வார்க்கப்பட்ட சோழர்

படிமங்கள் சிவபெருமானின் பல்வேறு தோற்றங்களை விளக்குகின்றன.

இவற்றுள் மிக்க எழில் வாய்ந்ததும் மீதுயர்கருத்துப் பொதிந்ததுமாய் ஒவ்வொரு உலகத்தோற்றத்தையும் கலை உருவ அமைப்பில் விளக்குவது சிவபெருமானின் அண்டரங்காகவுள்ள நடனமேயாம். இதற்குள்ள சிறப்பான தெய்வ உருவம் நடராசா - தாண்டவராயர் என்று கூறப்பெறும் இப்படிமம் நான்குகைகளுடன் அமைந்துள்ளது.

மேலே உள்ள வலக் கையில் தமருகமுள்ளது. இதன் ஒலி உலகத்தோற்றத்தைக் குறிக்கும். அடுத்த மேலே உள்ள இடக்கரம் அனற்பிழம்பை ஏந்துகிறது. இது பலநூறுகோடி ஆண்டுகளுக்குபின் நடைபெறும் மறைத்தலைக் குறிக்கிறது. இத்தகைய சிறப்பான படிமங்கள் இன்றைய வான்கோளங் களின் ஆய்வியல் கொள்கைகளுக்கு முன்னறிவிக்கும் தன்மை உடையன எனக் கருதவேண்டியிருக்கிறது.



# 6. வினை-பயன்-நியதி முதலியன

## 6.1 நியதி

காலம் வினைப்பயன்களை எப்பொழுது அனுபவிக்க வேண்டும் என்பதையும் எவ்வளவு நாள் அனுபவிக்க வேண்டும் என்பதையும் நிர்ணயம் செய்யும் என்று சொல்லப்பட்டது.

### இதற்கு-இது

நியதிதத்துவம் அவரவர் செய்த வினையை அவரவரே அனுபவிக்கும்படிச் செய்வதோடு எவ்வாறு அனுபவிக்க வேண்டும் என்பதையும் வரையறுக்கும். இன்ன வினைக்கு இன்ன பயன் என்பதை நியதித்தத்துவத்தைக் கொண்டுதான் இறைவனின் திருவருட் சத்தி நிர்ணயம் செய்கிறது.

திருவருட் சத்தி திரோதானசத்தியாக நாம் செய்த வினைக்குத் தக்க பயனைத்தான் தருமேயன்றி அதுவாக அதன் இச்சையாக எந்தப் பயனையும் பெத்தநிலையில் தராது; முத்திநிலையில்தான் திருவருட் சத்தியாக அதன் கருணை தானே பெருகும். இன்னவினைக்கு இன்ன பயன் என்பதை நிர்ணயிப்பதுதான் நியதித்தத்துவம்.

## 6.2 கலை

கலை, வித்தை, அராகம் ஆகிய தத்துவங்கள் பற்றி மற்றச் சமயங்கள் ஒன்றும் கூறவில்லை. சைவசித்தாந்தம் தான் இவைபற்றிக் கூறுகிறது. உயிர்கள் அநாதியில் ஆணவமல மறைப்பில் *தம்* அறிவு, இச்சை செயல்கள் தொழிற்படாமல் கேவல நிலையில் கிடந்தன. ஆணவ மல.பந்தத்திலிருந்து நீங்கும் பொருட்டு பல தத்துவக் கருவிகளை இறைவன் படைத்தளித்திருக்கிறான். ஆன்மா எவ்வித இயக்கமுமின்றிக் கேவல நிலையில் கிடக்கும்போது இறைவன் ***கலை*** என்னும் தத்துவத்தைப் படைத்து ஆன்மாவுக்கு அளிக்கின்றான். கலை தத்துவம் ஆன்மாவில் கிரியாசத்தியைச் சிறிது எழுப்புகிறது. ஆணவமலத்துள் மறைப்புண்டு இயங்காமல் கிடந்த ஆன்மாவின் கிரியாசத்தி ***கலை*** என்னும் தத்துவத்தின் துணை கொண்டு மெல்ல இயங்கத் தொடங்குகிறது.

***கலை*** என்பதற்கு 'நீக்குதல், செலுத்துதல்' என்னும் இரு பொருள் உண்டு. ஆன்மாவின் கிரியாசத்தியை எழுப்பி மறைக்கும் ஆணவமலத்தைச் சிறிது நீக்கி,அதனைச் செலுத் துதல் ***கலை*** என்னும் கருவியின் தொழிலாகும்.

ஆன்மா தனித்து நின்றால் ஆணவமலம் அதனைப் பற்றி அறிவிழக்கச் செய்து வரும். ஏதேனும் ஒரு கருவியாகப் பிரிப்பின்றி அதுபற்றி நின்றால் தான் அதன் அறிவு செயல்படும்.

ஒவ்வொரு தத்துவமும் அதற்கு இனமாக உள்ள மற்றொரு தத்துவத்துடன் இணைகிறது. ஆங்காரத் தத்துவம் செயற்பாட்டை ஊக்குவிப்பதால் கிரியாசத்தியை எழுப்பு கின்ற கலா தத்துவம் அதற்கு உட்கருவியாகிறது. ஆணவ மலத்துண்மை கொள்ளாத பிற சமயங்களுக்கு இவ்வாறு 'கலை' தத்துவம் உண்டெனச் சொல்ல வேண்டிய தில்லை.



## 6.3 வித்தை

அநாதி கேவலத்தில் ஆணவமலத்தால் மறைப்புண்டு கிடந்த ஆன்மாவின் ஞானசத்தியை முதற் கண் எழுப்புவது 'வித்தை' என்னும் தத்துவமாகும். அது நடைமுறையில் புத்திதத்துவத்திற்கு உட்கருவியாக விளங்குகிறது. புத்தி தத்துவத்தில் நிற்கும் பொழுது நாம் வேறுபட்டு நிற்கின்றோம். என்னும் உணர்வு தோன்றுவதால் நாம் பிரிப்பின்றி நிற்கின்ற உட்கருவியாக வித்தியா தத்துவம் புத்தி தத்துவத்திற்குள் விளங்குகிறது எனத் தெரிந்துகொள்ள வேண்டும்.

ஒவ்வொரு தத்துவமும் அதற்கு இனமாக உள்ள மற்றொரு தத்துவத்துடன் இணைவது இயல்பு. ஞானசத்தியை எழுப்புகின்ற வித்தியாதத்துவம் புத்திதத்தவத்தின் உட்கருவியாகிறது.

## 6.4 அராகம்

***அராகம்*** என்றால் விருப்பம் என்று பொருள். அநாதி கேவலத்தில் ஆணவமலத்தால் மறைப்புண்டு கிடந்த ஆன்மாவின் இச்சாசத்தியை அராக தத்துவம் எழுப்புகிறது. மனம் ஆசைப்படும் கருவியாதலால் அராக தத்துவம் மனத்திற்கு உட்கருவியாக நடைமுறையில் விளங்குகிறது. சித்தம் மனத்துள் அடங்கும்.

*காலம், நியதி, கலை, வித்தை, அராகம்* ஆகிய ஐந்து தத்துவங்களும் ஆன்மாவுக்கு உட்சட்டையாக அமையும்.

இச்சட்டை *கஞ்சுகசரீரம்* என்று சொல்லப்படுகிறது. அநாதி கேவலத்தில் எவ்வித உடலுமின்றிக் கிடந்த ஆன்மாவுக்கு முதலில் அசுத்த மாயையின் கலக்குண்ட பாகம் பொதுச் சரீரமாக அமைகிறது. இதனைக் *காரண சரீரம்* எனக் கூறுவர். அடுத்துக் *கஞ்சுகசரீரம்* சிறப்பு வகையாக அமைகிறது. மகாசங்காரகாலம் அல்லது முத்திக்காலத்தில் தான் காரண சரீரமும் கஞ்சுகசரீரமும் நீங்கும். *கஞ்சுகசரீரத்தில்* ஆன்மா எப்பொழுதும் பிரிப்பின்றி நிற்கும்.

மேலே விளக்கப்பட்ட குணதத்துவமும் ஆன்மாவுக்கு ஒரு சரீரமாக விளங்கும். அதனைக் *குணசரீரம்* என்று கூறுவர். இஃதும் இறுதியில்தான் நீங்கும். *காரணசரீரம், கஞ்சுக சரீரம், குணசரீரம்* ஆகிய மூன்றையும் *பரசரீரம்* என்றும் *அதிசூக்கும சரீரம்* என்றும் சொல்வர்.

தன்மாத்திரைகள்ஐந்தும் மனம், புத்தி, ஆங்காரம் ஆகிய மூன்றும் கூடி நிற்கின்ற சரீரம் சூக்கும சரீரமாகும். இதுவும் மகாசங்கார காலம் அல்லது முத்தியில் தான் அழியும். ஞானேந்திரியங்களும், கன்மேந்திரியங்களும் கூடி நிற்கின்ற சரீரம் தூலசரீரம் ஆகும். இச்சரீரம் தான் புலனாகவுள்ளது. இத்தூல சரீரம் காலம்தோறும் நீங்க மீண்டும் புதிய சரீரம் வந்துகூடும்.

ஆன்மாவுக்குக் காரண சரீரம், கஞ்சுகசரீரம், குணசரீரம், சூக்குமசரீரம், தூ லசரீரம் என ஐந்து சரீரங்கள் உண்டு என்பது இதுகாறும் கூறியவற்றால் அறியப் பெறுகிறது.



# 7. புருடதத்துவம்

கஞ்சுகசரீரத்தைப் பற்றி நிற்கின்ற ஆன்மா பிரகிருதி மாயா கருவிகளைப் பற்றிப் போகம் அனுபவித்தற்கு ஆயத்தமாக நிற்கும் நிலையே புருடதத்துவமெனப்படும். புருடதத்துவம் உண்மையில் ஒரு தத்துவம் அன்று. எந்த உடலும் இன்றி இருந்த ஆன்மா கஞ்சுகசரீரத்தோடு கூடியதும் புருடன் என்று கூறப்படுகிறது. உடலின்றிக் கிடந்த ஆன்மாவினின்றும் வேறுபடுத்திக் காட்டுவதற்கே புருடன் என்னும் கொள்கை ஆளப் பெறுகிறது. புருடன் பிரகிருதிமாயா கருவிகளைப் பற்றுவதற்காக அவற்றை நோக்கி நிற்கும் நிலையை ஒரு தத்துவமாகக் கொண்டு புருட தத்துவமென்று சொல்லப் பெறுகிறது.

## 7.1 மாயை

பரந்து விரிந்து கிடக்கும் மாயையின் ஒரு பகுதியை இறைவன் ஆணையின் கீழ் அனந்ததேவர் கலக்கி அதனின்றும் காலம், நியதி, முதலிய தத்துவங்களைத் தோற்றுவிப்பார். இது கலை வித்தை போலக் காரியமாகாமல் அவற்றை நோக்கக் காரணமாக நிற்பதால் கடைசியில் வைத்து எண்ணப்பட்டது. இம்மாயை ஆன்மாவுக்கும் பொதுவகையில் ''காரண சரீரமாக'' அமையும்.

## 7.2 சிவதத்துவம்

சிவம்,சத்தி, சாதாக்கியம், மகேசுரம், சுத்தவித்தை எனச் சுத்தமாயா தத்துவங்கள் ஐந்தாகும். இவை சிவதத்துவங்கள் என்று சொல்லப்படும். இவை உலகத்தைத் தொழிற்படுத்தக் கருதும் இறைவனுக்கு அந்நிலையில் இடமாய் நிற்பனவே யன்றிச் சகலராகிய ஆன்மாக்களுக்குச் சரீரமாக வந்து பொருந்துவதில்லை. நாம் பேசும் சொற்கள் சுத்த மாயா தத்துவத்திலிருந்து தோன்றும். சிவதத்துவங்கள் கீழ் உள்ள அசுத்தமாயா தத்துவங்களை இயக்கும்.

## 7.3 மூன்று சத்திகள்

### சிவம்-நாத தத்துவம்

உலகத்தைச் செயற்படுத்தக் கருதும் இறைவன் தனது இச்சை, ஞானம், கிரியை ஆகிய மூன்று சத்திகளையும் சுத்த மாயையில் முதலில் செலுத்துவான். இச்சாசக்தி எப்பொழுதும் ஒரு தன்மையதாகவே இருக்கும். ஞானசத்தியும் கிரியா சத்தியும் தனித்தும் சம அளவிலும், கூடுதல் குறைவாகவும் சுத்தமாயையினை நோக்கும். முதலில் இறைவன் உயிர்களுக்கு உலகையும், உடலையும் தருவதற்காகத் தன் அளவில் ஞான சத்தியையும், கிரியா சத்தியையும் நோக்குவான். அப்பொழுது பரநாதமும் பரவிந்தும் தோன்றும். அவை இறைவனுடைய. ஆதலால் சடமாகிய தத்துவங்களாக வைத்து எண்ணப்பெறமாட்டா. பின்னர் இறைவன் தன் ஞானசத்தியைத் சுத்தமாயையின்கண் பொதுமையில் செலுத்துவான். அவ்வாறு செலுத்தும்போது சுத்தமாயையில் ஒரு பகுதி அவனுக்கு இடமாக அமையும். அது ''சிவ தத்துவம்'' என்று கூறப்பெறும். இச்சிவதத்துவம், தத்துவங்களில் வைத்து எண்ணப்பெறும். இறைவன் சுத்தமாயையின் ஒரு பகுதியை நோக்கியதும் அதன்கண் ஒரு அசைவு தோன்றும். அந்த அசைவிலிருந்து நாதம் பிறக்கும். இதனால் சிவ தத்துவத்தை நாததத்துவம் என்றும் சொல்வதுண்டு.



### சத்தி-விந்து தத்துவம்

ஞான சத்தியால் சுத்தமாயையின் ஒரு பகுதியை நோக்கிய இறைவன் தன் கிரியாசத்தியால் அடுத்த பகுதியைக் காரியப்படுத்துவான் அவ்வாறு காரியப்படுத்தும்போது சுத்தமாயையில் ஒரு சுழற்சி தோன்றும். இறைவனால் கிரியாசத்தி செலுத்தப்படுகின்ற இடமாதல் பற்றி இத்தத்துவம் *சத்திதத்துவம்* எனப்படும். சுழற்சி தோன்றுவதால் இது விந்து தத்துவம் எனவும் கூறப்பெறுகிறது.

### சதாசிவ தத்துவம்

ஞானசத்தியாலும், கிரியாசத்தியாலும் சுத்தமாயையைப் பொதுமையில் நோக்கிய இறைவன் இனிச் சிறப்பு வகையாக ஞானசத்தியும், கிரியாசத்தியும் சம அளவில் தொழிற்பட, சுத்தமாயையின் மூன்றாம் பகுதியை நோக்குவான். அவ்வாறு நோக்கும்பொழுது அது ***சதாசிவ தத்துவம்*** என்று கூறப்பெறும். சத்தியும், சிவமும் சம அளவில் கூடி நிற்பதால் *சாதாக்கியம்* என்று இதனைக் கூறுவர். இது கீழ் உள்ள தத்துவங்களைச் சிறப்பு வகையாகத் தொழிற்படுத்தும்.

## 7.4 மகேசுவர தத்துவம்

இறைவன் ஞானசத்தியிலும் பார்க்கக் கிரியா சத்தியை மிகுதியும் செலுத்தி நிற்கும் இடம் மகேசுவரதத்துவம் எனப்படும். இதில் ஞானசத்தி குறைந்தும், கிரியாசத்தி

மிகுந்தும் இருக்கும். இஃதும் கீழ் உள்ள தத்துவங்களை இயக்கும். இதனை ஈசுவர தத்துவம் என்றும் சொல்லுவர்.

## 7.5 சுத்த வித்தை

இறைவனின் கிரியா சத்தி குறைந்தும் ஞானசத்தி மிகுந்தும் தொழிற்படும் இடம் சுத்தவித்தை எனப்படும். இஃதும் கீழ் உள்ள தத்துவங்களை இயக்கும்.

இறைவன், பரநாதம், பரவிந்து, சிவம், சத்தி ஆகிய நான்கிலும் அருவமாக நிற்பான். அப்பொழுது அவனுக்குச் சிவம் என்று பெயர். சதாசிவ தத்துவத்தில் அருவுருவமாக நிற்பான். அப்பொழுது அவனுக்குச் *சதாசிவம்* என்று பெயர். மகேசுர தத்துவத்தில் உருவமாக நிற்பான். அப் பொழுது அவனுக்கு மகேசுரன் என்று பெயர். சுத்த வித்தையில் பிரமா, திருமால், உருத்திரன் ஆகிய மூன்று நிலையில் நிற்பான். அஃதும் உருவநிலையே ஆகும். இந்நிலையை வித்தியேசுவர நிலையெனச் சொல்வது வழக்கம்.

**திருஞான சம்பந்தர், முதல் திருமுறை**
**திருச்சிவபுரம்**

புவம்வளி கனல்புனல் புவிகலை யுரைமறை
திரிகுணம் அமர்நெறி
திவமலி தருசுரர் முதலியர் திகழ்தரும்
உயிரவை யவைதம
பவமலி தொழிலது நினைவொடு பதுமநன்
மலரது மருவிய
சிவனது சிவபுரம் நினைபவர் செழுநில
னினில்நிலை பெறுவரே

**-சிவத்தின் பிரமா நிலை**



மலைபல வளர்தரு புவியிடை மறைதரு
வழிமலி மனிதர்கள்
நிலைமலி சுரர்முதல் உலகுகள் நிலைபெறு
வகைநினை வொடுமிகும்
அலைகடல் நடுஅறி துயிலமர் அரியுரு
வியல்பர னுறைபதி
சிலைமலி மதில்சிவ புரநினை பவர்திரு
மகளொடு நிகழ்வரே.

**-சிவத்தின் திருமால் நிலை**

பழுதில கடல்புடை தழுவிய படிமுத
லியவுல குகள் மலி
குழுவிய சுரர்பிறர் மனிதர்கள் குலம்மலி
தருமுயி ரவையவை
முழுவதும் அழிவகை நினைவொடு முதலுரு
வியல்பர னுறைபதி
செழுமணி யணிசிவ புரநகர் தொழுவமர்
புகழ்மிகு முலகிலே

**-சிவத்தின் உருத்திரன் நிலை**

புகுந்தறி வான்புவ னாபதி அண்ணல்
புகுந்தறி வான்புரி சக்கரத் தண்ணல்
புகுந்தறி வான்மலர் மேலுறை புத்தேள்
புகுந்தறி யும்முடிக் காகிநின்றாரே

**-திருமந்திரம் 397.**

இந்த ஐந்து தத்துவங்களிலும் இவ்வாறு நின்று அசுத்தமாயையில் உள்ள தத்துவங்கள் தோன்றவும், இயங்கவும் அனந்தேசுவரருக்குத் துணையாகச் செயற்

படுவான்.

**கீழ் உள இயக்கும்**

சுத்தமாயா தத்துவங்கள் கீழ் உள்ள தத்துவங்களை இயக்குவதால் பிரேரகத் தத்துவங்கள் என்று சொல்லப்படும்.

சிவதத்துவம் கீழ் உள்ள மாயையை எழுப்பும்; சத்திதத்துவம் காலம், நியதி, கலையை எழுப்பும்; சாதாக்கியம் புருடனை எழுப்பும்; ஈசுவரம் அராகத்தை எழுப்பும்; சுத்தவித்தை வித்தையை எழுப்பும்; இவ்வாறு இந்தத் தத்துவங்களும் செயற்படும். **சுத்தமாயை**க்கு ஊர்த்துவ மாயை, மகாமாயை, குடிலை, விந்து எனப் பெயர்கள் உண்டு. **அசுத்தமாயை**க்கு அதோமாயை, மாயை, மோகினி என்னும் பெயர்கள் உண்டு. **பிரகிருதிமாயை**க்கு மான், அவ்வியத்தம் என்னும் பெயர்களுண்டு. மேலே சொன்னவாறு முப்பத்தாறு தத்துவங்களும் ஆன்மாவிற்குக் கருவிகளாக நின்று பயன்படும். இதுவரை 36 தத்துவங்கள் பற்றி ஆராய்ந்தோம். இத்தத்துவங்கள் பொருள் உலகைச் சார்ந்தவை ஆகும். இனிச் சொல் உலகு பற்றி ஆராய்வோம்.



# 8. சொல் உலகு

நாம் பேசுகின்ற சொற்கள் சொல் உலகைச் சார்ந்தவை ஆகும். சொற்கள் பொருட்களைப் பற்றியே நிற்கும். ஆதலால் சொல் உலகைத் தத்துவங்களுள் வைத்து எண்ணாமல் தாத்துவிகங்களில் வைத்து எண்ணுவது வழக்கம்.

சொற்கள் இல்லாவிட்டால் நமக்கு அறிவு விளங்காது. *குடம்* என்று சொன்னதும் குடமாகிய பொருள் நம் நினைவுக்கு வருகிறது. சொற்கள் பல்வேறு மொழிகளுக்கு உரியனவாக விளங்குகின்றன. மொழிகள் வாயிலாகத்தான் நாம் ஒருவரை ஒருவர் புரிந்துகொள்கிறோம்.

சொல் என்பது நாம் காதால் கேட்கின்ற ஓசையைக் குறிக்காது. அவ்வோசையின் வழியே எழுந்து நமக்குப் பொருள் உணர்வை உண்டாக்குகின்ற ஆற்றலையே குறிக்கும். *எழுத்து* எனப்படுவதும் சொல் எனப்படுவதும் உண்மையில் இவ்வாற்றலே ஆகும். சொற்கள் சொல்லப் பட்டதும் அழியும். ஆனால் அவை பொருள் உணர்த்தும் ஆற்றலை எழுப்புவதால் அவ்வாற்றலே நமக்குப் பொருளை உணர்த்தும் என அறிதல் வேண்டும்.

### வெற்றொலி

பொருள் உணர்த்தாமல் வெறும் சத்தம் மாத்திரமாய் நாம் கேட்பது *ஓசை* எனப்படும். பொருள் உணர்வோடு நாம் கேட்பது அனைத்தும் சுத்தமாயையில் இருந்தே தோன்றும்.

### வாக்கு வகைகள்

முதன் முதல் சிவதத்துவம் எனப்பெறும் நாததத்துவத்தில் சுத்தமாயையின் விருத்தியாய் சூக்குமை வாக்குத் தோன்றும். ***சூக்குமை வாக்கு*** சொல் வடிவில் இல்லாமல் சொற்கள் தோன்றக்கூடிய தகுதியுள்ள ஒலி அளவாக நிற்கும்.

அடுத்து சத்திதத்துவம் என்னும் விந்துதத்துவத்தில் சொல் பொதுவில் விளங்கியும், சிறப்பு வகையில் விளங்காதும், நிற்கும். இது *பைசந்தி* வாக்கு எனப்படும். ***பைசந்தி வாக்கு*** என்றால் *விளங்குவது* என்று பொருள். இது விளங்கியும் விளங்காமலும் நிற்பதால் மயில் முட்டையில் உள்ள நீர்போல நிற்கும் எனச் சொல்வதுண்டு. மயிலிடத்து உள்ள ஐவகை நிறங்களும் முட்டையில் உள்ள நீரில் விளங்கியும் விளங்காமலும், இருக்கும். சூக்குமை, பைசந்தி ஆகிய இருவகை வாக்கிலும் மொழிவேற்றுமை இல்லை. ஒலி அளவில் பொருள் உணர்த்துவனவாகவே அவை இருக்கும்.

சதாசிவ தத்துவத்தில் சொல் விளங்கித் தோன்ற உதானன் என்னும் காற்றுடன் கூடிக் கண்டத்தானத்தில் மெல்ல வெளிப்பட்டு நிற்கும். இது ***மத்திமை வாக்கு*** என்று சொல்லப்படும். இங்கே மொழி தோன்றும்.

மத்திமை வாக்கிற்கு அடுத்தபடியாக உதானன் என்னும் காற்றோடு விளங்கிய சொல் புறத்தே கேட்கும்படி



பிராணவாயுவோடு கூடி வெளிப்படுதல் ***வைகரிவாக்கு*** எனப்பெறும். வைகரிவாக்கை சூக்கும வைகரி என்றும், தூல வைகரி என்றும் இருவகையாகச் சொல்வது வழக்கம்.

தன் செவிக்கு மட்டும் கேட்கின்ற அளவில் நிற்பது ***சூக்கும வைகரி*** ஆகும். இது ஈசுவர தத்துவத்தில் தோன்றும். தன் செவிக்கும் பிறர் செவிக்கும் கேட்கும் படியாகப் பல், நாக்கு, முதலியவற்றின் மூலம், சொல் வெளிப்படுதல் ***தூலவைகரி*** ஆகும். இது சுத்தவித்தையில் தோன்றும்.

இருவகை வாக்குகளையும் வைகரி வாக்கு எனக் கொண்டு சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி என நால்வகை வாக்குகளாகக் கொள்வது வழக்கம். மந்திரங்கள் அனைத்தும் இந்த நால்வகை வாக்குகளை அடிப்படையாகக் கொண்டு சுத்தமாயையில் தோன்றும்.

### நேரே உணரும் நிலை

நால்வகை வாக்குகளில் ஏதேனும் ஒன்றின் துணையின்றிப் பொருளை நாம் உணர முடியாது. மொழி உணர்வின்றிப் பொருளை நேரே உணரும் நிலை முத்தியில்தான் உண்டாகும். மந்திரங்கள் சொற்றொடர்களாகவும் சொற்களாகவும், எழுத்துக்களாவும் தோன்றும்.

# 9. ஐந்து கலைகள்

## 9.1 கலைவகை

சுத்தமாயை அசுத்தமாயையை வியாபித்து நிற்கும். இந்த வியாபகம் ஐவகைப்படும். இந்த ஐவகைப் பகுதி களையும் ஐந்து கலைகளாகச் சொல்வது வழக்கம். அவற்றை நிவிர்த்திகலை, பிரதிட்டா கலை, வித்தியாகலை, சாந்திகலை, சாந்தியதீத கலை எனக் கூறுவர். நிவிர்த்தி கலையில் பிரகிருதிமாயையில் உள்ள மண் தத்துவம் மட்டும் அடங்கும்.

பிரதிட்டா கலையில் பிரகிருதி மாயையில் உள்ள ஆன்மதத்துவம் 24 இல் மண்தத்துவம் நீங்க்லாக ஏனைய 23 தத்துவங்களும் அடங்கும். வித்தியா கலையில் அசுத்தமாயா தத்துவம் எனப்படும். வித்தியாதத்துவம் ஏழும் அடங்கும். சாந்தி கலையில் சுத்த தத்துவத்தில் உள்ள சுத்தவித்தை, ஈசுவரம், சதாசிவம், மூன்றும் அடங்கும். சாந்தியதீத கலையில் சிவம், சத்தி என்னும் இரண்டு தத்துவமும் அடங்கும். ஆக 36 தத்துவங்களும் சுத்தமாயையின் பகுதிகளாகிய இந்த ஐந்து கலைகளிலும் அடங்கும். நிவிர்த்தி கலையில் சுத்தமாயையின் வியாபகம் முனைக்காமல் மிக மென்மையாக இருக்குமாதலால் அதன்கண் மண் தத்துவம் மட்டும் அடங்குகின்றது.



பிரதிட்டா கலையில் சுத்தமாயையின் வியாபகம் சிறிது கூடுதலாக முனைப்பதால் அதன்கண் ஏனைய 23 தத்துவங்களும் அடங்குகின்றன. வித்தியா கலையில் சுத்தமாயையின் வியாபகம் இன்னும் கூடுதலாக முனைக்கு மாதலால் அதன்கண் வித்தியா தத்துவம் ஏழும் அடங்குகின் றன. சாந்தி கலையில் சுத்தமாயையின் வியாபகம் மிகமிக அதிகமாக முனைக்குமாதலால் அதன்கண் சுத்த தத்துவங் களில் இறுதி மூன்றும் அடங்குகின்றன. சாந்தியதீத கலையில் சுத்தமாயையின் முனைப்பு முழுமையாக விளங்குவதால் அதன்கண் சிவம், சத்தி இரண்டு தத்துவங் களும் அடங்கு கின்றன. சுத்தமாயை வியாபகமாகவும், அசுத்த மாயை வியாப்பியமாயும் இருப்பதாலேயே இவ்வாறு ஐந்து கலைகளாகச் சுத்தமாயை வகுத்துச் சாத்திரங்கள் சொல்கின் றன.

### முத்திநெறி சேர்விக்கும்

இறைவனின் திருவருட்சத்தி ஐந்து கலைகளாக நின்று உயிரை முத்திக்கு இட்டுச் செல்லும். அந்தக் கலைகளுக்கும் இதே பெயர்கள் உண்டு. ஆனால் அவை சத்தி கலைகளாகும். அச்சத்தி கலைகளுக்கு இடமாகச் சுத்தமாயையின் பகுதிகள் இருத்தல் பற்றி அதே பெயர்கள் இப்பகுதிகளுக்கும் இடப்பட்டன.

## 9.2 புவனங்கள்

புவனங்கள் என்றால் உலகங்கள் என்று பொருள். இவற்றுள் அண்டங்களும் அடங்கும். ஒவ்வொரு தத்துவத் திலும் புவனங்கள் உண்டு. பிருதிவி தத்துவம் எனப்படும் மண்தத்துவத்தில் 108 புவனங்கள் உண்டு. என்றும், பிருதிவி

தத்துவத்திற்கு மேல் பிரகிருதிமாயா தத்துவம் வரை உள்ள தத்துவங்களில் 56 புவனங்கள் உண்டு என்றும், வித்தியா தத்துவம் ஏழிலும் 27 புவனங்கள் உண்டு என்றும் சுத்த தத்துவத்தில் சுத்தவித்தை ஈசுவரம், சதாசிவம் ஆகிய மூன்றிலும் 18 புவனங்கள் உண்டு என்றும் சத்தி நாதம் ஆகிய இரண்டு தத்துவத்திலும் 15 புவனங்கள் உண்டு என்றும் அண்டங்கள் ஆக 224 புவனங்கள் மொத்தமாகப் பிரபஞ்சத்தில் உண்டு என்றும் சிவாகமங்கள் கூறுகின்றன. இப்புவனங்களில் பல்வேறு வகையான உயிர் வர்க்கங்கள் வாழ்கின்றன. இவை நம் கண்ணுக்குத் தெரியமாட்டா. நாம் வசிக்கின்ற பிருதிவி தத்துவ புவனத்தில் உள்ள இந்த உலகம் மட்டும் நமக்குப் புலனாகிறது.

**அண்டப்பகுதியின் உண்டைப் பிறக்கம்**

நாம் வசிக்கின்ற பிருதிவி தத்துவத்தில் அண்டங்கள் இத்துணை என்று கணக்கிடுதலாகாமையின் அவை தம்மை மணிவாசகப் பெருமான்,

''நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன''

= திருவாசகம் -திருஅண்டப்பகுதி

என்றார்.

அண்டவியற் தத்துவமும் அண்டங்கள் எண்ணற்றவை என்றுதான் கூறுகிறது.

## 9.3 அத்துவாக்கள்

அத்துவாக்கள் என்றால் படி வழிகள் என்று பொருள். உயிர் முத்தியை நோக்கி முன்னேறுவதற்குரிய படிவழிகள் அத்துவாக்கள் எனக் கூறப்படும். ***மந்திரம், பதம், வன்னம், புவனம், தத்துவம், கலை*** என அத்துவாக்கள் ஆறாகும்.



மந்திரம் எழுத்துக்களால் ஆகிய சொல் ஆகும். பதம் மந்திரச் சொற்றொடராகும். வன்னம் என்பது எழுத்துக்களாகும். புவனம் என்பது உலகங்களாகும். தத்துவம் என்பது நாம் மேலே ஆராய்ந்த முப்பத்தாறு கருவிகளாகும். கலை என்பது மேலே சொல்லப்பட்ட ஐந்து கலைகளாகும்.

உலகம், சொல் உலகம், பொருள் உலகம் என இருவகைப்படும். சொல் உலகம் நால்வகை வாக்குகளாக மேலே விவரிக்கப்பட்டது. அவ்வாக்குகளில் தோன்றுகின்ற மந்திரம் பதினொன்றாகும். அவை பஞ்சப்பிரம மந்திரம் என்றும் சடாங்க மந்திரம் என்றும் சொல்லப்படும். மந்திரங்கள் பதங்களால் ஆகியவை இப்படிப்பட்ட பதத்தொடர்கள் 18 என்று ஆகமத்தில் சொல்லப்பட்டுள்ளது. அவை '' ஓ நமோ'' முதல் ''ஓங்காரம்'' வரை உள்ளவையாகும்.

எழுத்துக்கள் வடமொழியில் உள்ள 51 அக்கரங்களாகும். (கிரந்தம்)

புவனம் மேலே விவரிக்கப்பெற்றபடி 224 ஆகும்.
தத்துவம் மேலே விவரிக்கப்பெற்றபடி 36 ஆகும்.
கலை மேலே விவரிக்கப்பெற்றபடி 5 ஆகும்.

**ஒன்றில் ஒன்று அடங்க**

மந்திரம் பதத்துள் ஒடுங்கும்; பதம் எழுத்துள் ஒடுங்கும். எழுத்து புவனத்தில் ஒடுங்கும். புவனம் தத்துவத்தில் ஒடுங்கும். தத்துவம் கலையில் ஒடுங்கும். இதனை மந்திராத்துவா பதாத்துவாவிலும், பதாத்துவா வன்னாத்துவாவிலும், வன்னாத்துவா புவனாத்துவாவிலும், புவனாத்துவா தத்துவாத்துவாவிலும், தத்துவாத்துவா கலையிலும் ஒடுங்கும் எனக் கூறுவர்.

கலைகள் ஒன்றிலொன்று ஒடுங்கப் பிரபஞ்சம்

முழுவதும் ஒடுங்கும். இறைவன் குருநாதனாக வந்து ஐந்து கலைகளில் இவ் ஆறு அத்துவாக்களையும் அடக்கி அத்துவ சுத்தி செய்வித்து ஞானத்தைத் தருவான். இது முத்தியைத் தரும் நிர்வாண தீக்கை எனக் கூறப்படும். இறைவன் தீக்கை செய்விக்கும்போது ஆறு அத்துவாக்களும் பின்கண்டவாறு ஐந்து கலைகளிலும் அடங்கும்.

## 9.4 அத்துவாக்கள் அடங்குறு நெறி

**நிவர்த்தி கலை**

அசுத்தம், மிச்சிரம், சுத்தம் என்னும் மூவகை அத்து வாக்களும் மந்திரங்கள் முதலாக ஐவகைப்பட்டு ஒன்றின் ஒன்று வியாத்தியாய் (வியாபித்தல்) முறையானே பஞ்சக் கலைகளுள் அடங்குமாறு - மந்திரம் இரண்டும், பதம் இருபத் தெட்டும், இறுதியாகிய எழுத்து ஒன்றும், புவனம் நூற் றெட்டும், பிருதுவி தத்துவம் ஒன்றும், ஆகிய இவை ஒன் றின் ஒன்றாக நிவிர்த்தி கலையில் அடங்கும், அதற்குப் ***பிரமன்*** அதிதேவதை.

**பிரதிட்டா கலை**

வாரா நின்ற மந்திரம் இரண்டும், பதம் இருபத் தொன்றும் எழுத்து இருபத்து நான்கும், புவனம் ஐம்பத்தாறும், தார நின்ற தத்துவம் இருபத்தி மூன்றும் ஒன்றின் ஒன்றாக பிரதிட்டா கலையில் அடங்கும் . ***மால்*** அதி தெய்வம்.

**வித்தியா கலை**

மந்திரம் இரண்டும், பதம் இருபதும், எழுத்து ஏழும் புவனம் இருபத்தேழும், வித்தியாதத்துவம் ஏழும், ஆகிய



இவைகள் ஒன்றின் ஒன்றாக வித்தியா கலையில் அடங்கும். ***உருத்திரன்*** அதிதெய்வம்.

**சாந்தி கலை**

மந்திரம் இரண்டும், பதம் பதினொன்றும், எழுத்து மூன்றும் ஆகிய புவனம் பதினெட்டும், உத்தமமாகிய தத்துவம் மூன்றும் ஆகிய இவைகள் ஒன்றின் ஒன்றாக சாந்தி கலைக்கண் அடங்கும். ***மகேச்சுரன்*** அதிதெய்வம்.

**சாந்தியாதீத கலை**

மந்திரம் மூன்றும், பதம் ஒன்றும், எழுத்துப் பதினா றும், சிறந்த புவனம் பதினைந்தும், தத்துவம் இரண்டும் ஆகிய இவைகள் ஒன்றின் ஒன்றாக சாந்தீயாதீத கலைக் கண்ணே அடங்கும். அதற்குச் ***சதாசிவர்*** அதிதெய்வம்.

சத்தியோசாதம் முதலிய பதினோரு மந்திரங்களும், சிவாயநமோநம முதலிய எண்பத்தொரு பத மந்திரங்களும் க்ஷகார முதலாகிய வன்னம் ஐம்பத்தொன்றும் சிறந்த அநாகிருத புவனம் மு தல் புவனம் இருநூற்றிருபத்து நான்கும் பிருதுவிதத்துவ முதலிய தத்துவம் முப்பத்தாறும், நிவர்த்தி கலை முதலிய கலை ஐந்தும், ஆகச் சங்கார முறையின் வைத்தெண்ணி இவ்வாறு கண்டு கொள்க.

ஐந்து கலைகளைப் பற்றி விவரிக்கும்போது சுத்த மாயையில் மிக முனைந்து நிற்கும் பகுதி, குறைவாக முனைக்கும் பகுதி என்னும் வேறுபாடுகள் உண்டெனக் கூறியிருக்கிறோம். மந்திரம், பதம், எழுத்து, புவனம், தத்துவம், கலை ஆகியவற்றிலும் தூல, சூக்கும வேறுபாடுண்டு. தூலமாக உள்ள அத்துவாக்களை தூல கலைகளில் அடக்கியும் சூக்குமமாக உள்ளவற்றை இரு

சூக்கும கலைகளில் அடக்கியும், இறைவனாகிய குருநாதன் தீக்கை செய்விப்பான். இவ்வாறு செய்விப்பதன் பொருள் 36 தத்துவங்களால் ஆகிய உலக பந்தத்தை உயிர்விடுத்து இறைவனோடு ஒன்றுவதுதான்.

*குறிப்பு: சிவஞானசித்தியார் சுபக்கம், சூ 8 அதிகரணம் 1 சாதனஇயல் - செய்யுள் - 7,8,9*

**அறிவால் அறிய அரியன**

இருவினை ஒப்பு, மலபரிபாகம், சத்திநிபாதம் வந்துற்ற நிலையில் இறைவனாகிய குருநாதன் இத்தீக்கையைச் செய்விப்பதால் நம் அறிவைக் கொண்டு இவற்றின் உண்மையை அளக்க இயலாது. சிவாகமங்களில் சொல்லப் பட்டுள்ள அளவில் இவற்றை நாம் தெரிந்து கொள்ளலாம்.

## 9.5 ஐந்துகோசங்கள்

தூலசரீரம், அன்னமயகோசம் என்றும், சூக்கும சரீரம் பிராணமயகோசம் என்றும் குணசரீரம் மனோமயகோசம் என்றும் கஞ்சுகசரீரம் விஞ்ஞானமய கோசம் என்றும், காரணசரீரம் ஆனந்தமய கோசம் என்றும் சொல்லப்படும்.

தூல சரீரம் உணவால் நிலைப்பதால் அன்னமய கோசம் என்றும், சூக்குமசரீரம் பிராணவாயுவின் இயக்கத்தால் செயற் படுவதால் பிராணமயகோசம் என்றும், குண சரீரம் சித்தமாய்ச் செயல்படுவதால் மனோமயகோசம் என்றும், கஞ்சுகசரீரம் ஆன்மாவுக்கு அறிவை உண்டாக்கு வதால் விஞ்ஞான மய கோசம், என்றும் காரணசரீரம் சிறிது இன்பத்தை உண்டாக்கு வதால் ஆனந்தமய கோசம் என்றும்



கூறப்படும்.

**கருப்பையூர் சார்விக்கும்**

இத் தூலவுடம்பு (பூதனாசரீரம்) போனால் தானும் உடன் அழிதலின்றி நிலைபெற்றுள்ளதாகிய சூக்கும உடம்பி னின்றும் யாதானாசரீரமாகி அவ்வினைப் பயன்களை அனு பவித்தற்குரிய வெவ்வேறு உடம்புகள் உளவாதலான், சீவன் அவ்வுடம்போடு நாதனார் ஆணை செலுத்தச் சென்று சுவர்க்கமொடு நரகு, இன்ப துன்பங்களை நுகர்ந்து பின்பு அவ்வினைச் சேடம் (மீதியுள்ளது) அனுபவித்தற்பொருட்டுச் சூக்கும உடம்போடு நிலத்திற் சென்று யோனி (கருப்பாயசம்) சேர்ந்திடும்.

**சத்திரூபம்**

அவ்வினைகளது வன்மை மென்மைகட்கு ஏற்பப் பூதனா சரீரம் போயவாறே யாதனா சரீரத்தை எடாது மற்றுமோர் பூதனா சரீரத்தை எடுத்தலுமுண்டு.

யாதனா சரீரம் போயவாறே பூதனா சரீரம் எடாது மற்றுமோர் யாதனா சரீரத்தை எடுத்தலும் உண்டு.

இவையெல்லாம் இடைவிடாது நிகழ்தலும் உண்டு. இடைவிட்டு நிகழ்தலும் உண்டு.

சூக்கும உடம்பில் தூலவுடம்புகள் உண்டாம் தன்மைக்கு உதாரணம் என்னை எனின் மரம் காலமுற்று நீங்கப்பெற, மரவேரில் மற்றொரு நீண்ட மரம் உண்டாதல் போலும்.

ஆகலின் சூக்கும உடம்பில் தூல உடம்புகள் சத்திரூபமாயிருந்து தோன்றுவன.

**கூட்டுவிப்பான்**

சிவன் உயிர்களை அநாதிசம்பந்தமாகப் பற்றி இருக்கின்ற ஆணவ இருளை வலிகெடச் செய்தற் பொருட்டு நல்வினை தீவினை யென்னும் தொழில்களைச் செய்யும்படி பிரவாக அநாதி சமபந்தமாகிய கன்ம மலத்தோடு சேர்ப்பன்.

அறம் பாவம் என்னும் கன்மம் நிகழ்தற்கு உடம்பு இன்றியமையாது இருத்தலின் பிரவாக அநாதிசம்பந்தமான மாயையோடு சேர்ப்பன்,

இம்முறைமையையே -

'' வல்வினையேன் தன்னை
மறைந்திட மூடிய மாய இருளை
அறம்பாவம் என்னும் அருங்கயிற்றால் கட்டிப்
புறந்தோல் போர்த் தெங்கும் புழு அழுக்கு மூடி
மலஞ்சோரும் ஒன்பது வாயிற் குடிலை
மலங்கப்புலனைந்தும் வஞ்சனையைச் செய்ய''

**=திருவாசகம் - சிவபுராணம்**

என மணிவாசகப் பெருமான் அருளியமையுங் காண்க.

தூல உடம்பிற்கு முதற்காரணம் சூக்கும உடம்பு. அதற்கு மூலம் 'மான்' (மூலப்பகுதி). அதற்கு முதற்காரணம் மோகினி. அதுபரமமுதற் காரணமெனப்படும். சுத்தமாயை இவை அனைத்திற்கும் வியாபகமாய் நிற்கும்.

இவ்விருவகைப் பிரபஞ்சமும் ஆன்மா சிவத்தினைச் சார்தற்கு ஏதுவாகிய பக்குவகாலம் அமைதற் பொருட்டு உள்ளன.



## 9.6 பூதங்களின் குணம், செயல் ,வடிவம், நிறம்

**ஐம்பூத இயல்**

மண்:- குணம்-கடினமாதல்; செயல் -தாங்குதல்; வடிவம்-நாற்கோணம்; நிறம்-பொன்மை; அடையாளம் -வஜ்ராயுதம்; எழுத்து- லகரமெய் ; அதிதேவர்- ***பிரமன்;***

நீர்:- குணம் - குளிர்ச்சி; செயல் - பதம் செய்தல்; வடிவம் - பிறை; நிறம் - வெண்மை; அடையாளம் - தாமரை; எழுத்து - வகரமெய்; அதிதேவர் - ***திருமால்;***

நெருப்பு:- குணம் - வெம்மை; செயல் - சுட்டு ஒன்று படுத்துதல்; வடிவம் - முக்கோணம்; நிறம் - செம்மை; அடை யாளம் - சுவத்தி; எழுத்து - ரகரமெய்; அதிதேவர் -***உருத் திரர்;***

காற்று:- குணம்-அசைதல்; செயல்- பொருட்களைத் திரட்டல்; வடிவம் -அறுகோணம்; நிறம்-கருமை; அடையா ளம்-ஆறுபுள்ளி; எழுத்து-யகரமெய்; அதிதேவர்- ***மகேசுரன்.***

ஆகாயம்:- குணம்-வெளியாகுதல்; செயல் -இடங்கொடுத்தல்; வடிவம்-வட்டம்; நிறம்-புகைமை; அடையா ளம்- அமுதவிந்து; எழுத்து-அகரஉயிர்; அதிதேவர் -***சதாசிவன்;***

## 9.7 தத்துவங்களின் தோற்ற முறை

### செய்வான்

சுத்தமாயா தத்துவங்கள் சிவம், சத்தி, சதாசிவம் ஈசுவரம், சுத்த வித்தை என்னும் வரிசையில் தோன்றும். சுத்தமாயா தத்துவங்களில் இறைவன் நேரே செயலாற்றுவான்.

### செய்விப்பான்

அசுத்தமாயா தத்துவங்களை இறைவன் அனந்ததேவர் வாயிலாக வெளிப்படுத்துவான். அசுத்த மாயையை அனந்ததேவர் கலக்கி ஒரு பகுதியை மாயை, எனப் பிரித்து எடுப்பார்: அம்மாயையிலிருந்து காலதத்துவம் தோன்றும். பின்னர் அந்த மாயையிலிருந்தே நியதி தத்துவம் தோன்றும். அதன்பின் மாயையிலிருந்து கலை என்னும் தத்துவம் தோன்றும். கலையிலிருந்து வித்தை என்னும் தத்துவம் தோன்றும். வித்தையினின்றும் அராகம் என்னும் தத்துவம் தோன்றும். இத்தத்துவங்கள் சேர்ந்ததே புருட தத்துவமாகும்.

### கலையில் தோன்றுவ

கலையினின்றும் பிரகிருதி மாயை தோன்றும். பிர கிருதி மாயையில் சத்துவ, ராசத, தாமத குணங்கள் வெளிப் படாமல் அடங்கி நிற்கும். அவை சமமாக வெளிப்படும் நிலை குண தத்துவம் ஆகும். பின்னர் சத்துவ குணம் மேற்பட அதன்கண் புத்திதத்துவம் தோன்றும். அதன் பின் ராசதகுணம் மேம்படப் புத்தி தத்துவத்தினின்றும் ஆங்கார தத்துவம் தோன்றும்.



### ஆங்காரம்-தோற்றுவிக்கும்

ஆங்கார தத்துவம் சாத்வீகக் கூறு, ராசதக்கூறு, தாம தக்கூறு என முக்குணங்களின் வழி மூன்று கூறாய் நிற்கும். சாத்வீகக் கூறு ***தைசத ஆங்காரம்*** என்றும் இராசதக் கூறு ***வைகரி ஆங்காரம்*** என்றும் தாமதக்கூறு ***பூதாதி ஆங்காரம்*** என்றும் பெயர் பெறும். பின்னர் தைசத ஆங்காரத்தினின்றும் மனம் என்னும் கருவி தோன்றும் அதன்பின் அந்த ஆங் காரத்திலிருந்தே ஞானேந்திரியங்கள் ஐந்தும் முறையே செவி, தோல், கண், நாக்கு, மூக்கு என ஒன்றன்பின் ஒன்றாகத் தோன் றும். வைகரி ஆங்காரத்தின்றும் கால், கை, வாய், கருவாய், எருவாய் ஆகிய ஐந்தும் ஒன்றன்பின் ஒன்றாக முறையே தோன்றும். தாமத ஆங்காரமாகிய பூதாதி ஆங்காரத்தின்றும் முறையே சத்தம், பரிசும், ரூபம், இரதம், கந்தம் எனும் ஐந்து தன்மாத்திரைகளும் தோன்றும். சத்த தன்மாத்திரையினின்றும் ஆகாய பூதம் தோன்றும். பரிச தன்மாத்திரையில் இருந்து காற்று எனும் பூதம் தோன்றும். ஒளி தன்மாத்திரையில் இருந்து நெருப்பு எனும் பூதம் தோன்றும். இரத தன்மாத்திரையில் இருந்து நீர் என்னும் பூதம் தோன்றும். கந்த தன் மாத்திரையிலிருந்து மண் எனும் பூதம் தோன்றும். பூதங்கள் ஒன்றிலிருந்து ஒன்று தோன்றாமல் மேற்சொன்னவாறு ஒவ்வொரு தன்மாத்திரையிலிருந்தும் ஒவ்வொரு பூதம் தோன்றும். இவ்வாறு 36 தத்துவங்களும் தோன்றும். ஒடுங் கும் பொழுது எந்தத்தத்துவம், எந்தத்தத்துவத்திலிருந்து தோன்றியதோ அந்தத் தத்துவத்தில் கீழிருந்து முறையே ஒடுங்கும்.

## 9.7 தாத்துவிகங்கள்

தத்துவங்களின் காரியம், தாத்துவிகங்கள் எனப்படும். ஆனால் தாத்துவிகம் அனைத்தும் உடலில்

உள்ளன ஆக இருக்குமே அல்லாமல் வெளி உலகில் உள்ளன ஆக இருக்கமாட்டா. தாத்துவிகங்கள் 60 ஆகும். தத்துவம் 36ம், தாத்துவிகம் 60ம் சேர்ந்து மொத்தம் 96 ஆகும்.

**அறுபதினாறென அறைவன சமயம்**

பிறசமயங்கள் 36 தத்துவங்களைச் சொல்லாவிட்டா லும் தாத்துவிகங்களில் சிலவற்றைக் கூடுதலாகச் சொல்லி 96 எனக்கணக்கிடுகின்றன. இந்தியாவில் தோன்றிய சமயங்கள் அனைத்தும் தத்துவ, தாத்துவிகங்களின் மொத்தம் 96 என்ப தில் பெரிதும் ஒத்துப்போகின்றன.

## 9.8 தாத்துவிகம் அறுபது

மண்ணின் கூறு:- எலும்பு, தசை, மயிர், தோல், நரம்பு என்னும் ஐந்து.

நீரின் கூறு:- சிறுநீர், இரத்தம், சிலேத்துமம், வியர்வை, சுக்கிலம் அல்லது சோணிதம் என்னும் ஐந்து.

நெருப்பின் கூறு:- இருதயத்தில் வெப்பம், பசித்தீ, கண்ணில் வெப்பம், உடம்பில் வெப்பம், பைத்தியம் என்னும் ஐந்து.

காற்றின் கூறு:- உதானன், பிராணன், அபானன், சமானன், வியானன், நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தனஞ்சயன் என்னும் வாயுக்கள் பத்து.

வானின் கூறு:- அத்தி, அலம்புடை, இடை, பிங்கலை, சுழுமுனை, காந்தாரி, குகு, சங்குனி, சிங்நுவை, புருடன் என்னும் நாடிகள் பத்து.

ஞானேந்திரியங்களின் விடயங்கள்:- சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம், என்னும் ஐந்து.

கன்மேந்திரியங்களின் விடயங்கள்:-வசனம், கமனம், தானம், விசர்க்கம், ஆனந்தம் என்னும் ஐந்து.



ஆங்காரத்தின் கூறு:- தைசம், வைகாரியம், பூதாதி என்னும் மூன்று. காமம், குரோதம், உலோபம், மோகம், மதம் எனக் குற்றம் ஐந்து (மாற்சரியம் குரோதத்துள் அடங்கும்)

குணத்தின் கூறு:- சாத்துவிகம், இராசதம், தாமதம், என்னும் மூன்று. சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி என்னும் வாக்கு நான்கு. இவை அனைத்தையும் கூட்டத் தாத்துவிகங் கள் அறுபது ஆம்.

**ஈற்றில் இரிவது**

அதிகவெப்பத்தால் மூளை கலங்கிப் பைத்தியம் உண்டாகிறது. அதனால் அது நெருப்பின் கூறாக வைக்கப் பெற்றது. காற்றின் கூறாகச் சொல்லப்பெற்றுள்ள வாயுக்கள் நம் உடம்பின்கண் உள்ளவை. தனஞ்சயன் என்னும் வாயு தான் கடைசியாகப் பிரியும். வானின் கூறாகச் சொல்லப் பெற்று நாடிகளின் உள்ளே இடைவெளி இருப்பதால் அவை ஆகாயத்தின் கூறாகச் சொல்லப்பெற்றது.

ஞானேந்திரியங்களின் விடயங்கள் சத்தம், பரிசம், ரூபம், இரதம், கந்தம் என மேலே சொல்லப்பெற்றுள்ளது. தன்மாத்திரைகளையும், சத்தம் பரிசம், ரூபம், இரதம், கந்தம் எனக் கூறுகிறோம். இவ்விரண்டும் ஒன்றல்ல. ஞானேந் திரியங்களின் விடயங்கள் கண், காது, மூக்கு, இவைகளால் கவரப்படும் புலன்களாகும். இவற்றை விடய தன்மாத்திரை என்று சொல்வது வழக்கம். விடய தன்மாத்திரை தாத்து விகத்தைச் சேர்ந்தது. ஐம்பூதங்களுக்கும் முதலாக உள்ள சத்தம், பரிசம், ரூபம் முதலிய தன்மாத்திரைகள் பூத தன் மாத்திரைகள் என்னும் சூக்கும பூதங்கள் ஆகும். அவை தத்துவத்தைச் சார்ந்தவை. இரண்டிற்கும் உள்ள வேறு பாட்டைப் புரிந்துகொள்ள வேண்டும்.

**ஒருவர், இருவர் துணைகொண்டு**

சுத்தமாயையின் காரியங்கள் வைந்தவம் என்றும், அசுத்தமாயையின் காரியங்கள் மாயேயம் என்றும் பிர கிருதிமாயையின் காரியங்கள் பிராகிருதம் என்றும் சொல்லப் படும். சுத்தமாயையின் காரியங்கள் ஐந்து சிவதத்துவங் களாகும். அசுத்தமாயையின் காரியங்கள் ஏழுவித்தியா தத்துவங்கள் ஆகும். பிரகிருதி மாயையின் காரியங்கள் 24 ஆன்ம தத்துவங்கள் ஆகும். சுத்தமாயையைச் சிவபெருமான் நேரே காரியப்படுத்துவார். அசுத்த மாயையை அனந்தேசு வரர் என்னும் விஞ்ஞான கலரைக் கொண்டு காரியப்படுத் துவார். பிரகிருதி மாயையைப் பிரளயாகலருள் ஒருவராகிய சீகண்ட ருத்திரரைக் கொண்டு காரியப்படுத்துவார்.

**உயிர்களின் இருப்பிடங்கள்.**

விஞ்ஞான கலருக்கு அசுத்தமாயைக்கும், சுத்தவித்தைக்கும் நடுவே உள்ள புவனங்கள் இருப்பிடங் களாகும். ஆண்டு சுத்தகாலம் முதல் சுத்த நிலம் ஈறாகிய சுத்த தத்துவங்கள் உண்டு. அவை விஞ்ஞான கலருக்குச் சரீ ரங்களாகும். பிரளயாகலருக்கு அசுத்தமாயையின் நடுவே உள்ள புவனங்கள் இருப்பிடமாகும். அவர்களுக்குக் காரண சரீரமும், கஞ்சுக சரீரமும் உண்டு. சகலராகிய நமக்குக் காரண சரீரம், கஞ்சுக சரீரம், குணசரீரம், சூக்கும சரீரம், தூ லசரீரம் என ஐந்து சரீரங்கள் உண்டு. நமக்குச் சிவதத்துவங்கள் சரீரமாக வராமல் நமக்குள் தத்துவங்களை இயக்கும் தன்மை யனவாக இருக்கும்.



# 10. அந்தக்கரண எழுத்துகள

**பொருள் அறிவு**

பொருள் உலகும் சொல் உலகும் இணைந்தே நிற்கும். அசுத்த மாயா கருவிகள் பிரகிருதி மாயா கருவிகளை எழுப்புமாயினும், சொல்லுணர்வு தோன்றாமல் பொருட் களை நாம் அறிய முடியாதாதலால் அக்கருவிகளோடு ஐந்து கலைகளில் நிற்கும் சூக்குமை, பைசந்தி முதலிய வாக்கு களுக்கு உரிய எழுத்துக்களாகிய நாதம், விந்து, மகரம், உகரம், அகரம் ஆகியவை அந்தக்கரணங்களை உடன் செலுத்தும், அவ்வாறு செலுத்தினால்தான் சொல்லுணர்வு தோன்றிப் பொருள் பற்றிய அறிவு நமக்கு உண்டாகும்.

தூல வைகரி, நிவர்த்தி கலையைப் பற்றி அகர அக்கரவடிவாய் நிற்கும். சூக்கும வைகரி, பிரதிட்டா கலையைப் பற்றி உகர வடிவில் நிற்கும். மத்திமை வித்தியாகலையைப் பற்றி மகர வடிவில் நிற்கும். பைசந்தி சாந்தி கலையைப் பற்றி விந்து வடிவாய் நிற்கும். சூக்குமை சாந்தி அதீத கலையைப் பற்றி நாத வடிவாய் நிற்கும்.

அகரம் ஆங்கார அந்தக்கரணத்தைச் செலுத்தும் உகரம் புத்தி தத்துவத்தைச் செலுத்தும், மகரம் மனமாகிய அந்தக்கரணத்தைச் செலுத்தும், விந்து சித்தத்தைச் செலுத்தும்

நாதம் புருடனைச் செலுத்தும்.

அகரம் அங்காத்தலாகிய முயற்சியால் வெளிவருவதால் ஆங்கார தத்துவத்தைச் செலுத்தும். அட்சரமாயிற்று. உகரம் வாயை அசைத்தலால் உண்டாவதால் உகரமாகி நிச்சயிக்கும் புத்தி தத்துவத்தைச் செலுத்துவதற்கு உரியதாயிற்று. மகரம் மௌனமாய் மனத்தில் தோன்றுவதால் மனத்தைச் செலுத்துவதற்கு உரியதாயிற்று. அட்சரங்கள் நிர்விகற்பமாக இருக்கும் நிலையில், விந்து தத்துவம் சித்தத்தைச் செலுத்துவதற்கு உரியதாயிற்று. ஒலி மாத்திரமாய் நிற்கும் நாதம் புருடதத்துவத்தைச் செலுத்துவதற்கு உரியதாயிற்று. இந்த அட்சரங்களும் சடமாதலால் இவற்றை இவற்றிற்குரிய அதிதேவர்கள் செலுத்துவார்கள். அகரத்திற்குப் பிரமனும், உகரத்திற்குத் திருமாலும், மகரத்திற்கு உருத்திரனும், விந்துவிற்கு மகேசனும், நாதத்திற்குச் சதாசிவனும் அதிதேவர்கள் ஆவர்.

**ஐந்தவத்தைக்குரிய கருவிகள்:**

உயிர், சாக்கிரம் (நனவு) சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என ஐந்தவத்தைப்படும். தத்துவ தாத்துவிகங்கள் மொத்தம் 96. இவற்றுள் புருடன் நீங்கிய வித்தியாதத்துவம் - 6 - ம் சிவதத்துவம் 5ம், அவத்தைக்கு ஏதுவாகமாட்டா. மீதம் 85 தத்துவ, தாத்துவிகங்கள் அவத்தைக்கு ஏதுவாகும். சாக்கிரத்தில் 35 கருவிகள் தொழிற்படும். 50 கருவிகள் தொழிற்படமாட்டா தொழிற்படும் கருவிகள்:-

ஐயைந்து பத்துடன் ஆனது சாக்கிரங்
கைகண்ட ஐயைந்திற் கண்டங் கனா என்பர்
பொய் கண்டமூவர் புருடன் சுழுனையின்
மெய்கண்ட வனுந்தி மேவல் இருவரே



= திருமந்திரம்- 2200

இதன் விளக்கம்:-

| | | |
|---|---|---|
| சாக்கிரத்தில் பொறிகள் 10, | புலன்கள் - 10 | ... 20 |
| பிராணன் முதலிய வாயுக்கள் - 10, அந்தக்கரணம் 4 | | ...14 |
| புருட தத்துவம் | | ..1 |
| ஆக தொழிற்படும் கருவிகள். | | 3 5 |

கனவு நிலையில் அவற்றுள் பொறிகள் நீங்கலாக ஏனைய25கருவிகள் தொழிற்படும். சுழுத்தியில்பிராணன் சித்தம், புருடன் என்னும் 3 கருவிகளும்,துரியத்தில் பிராணன் புருடன் என்னும் 2 கருவிகளும் தொழிற்படும். துரியாதீதத்தில் கருவி புருடன் ஒன்றே.

**திருச்சிற்றம்பலம்**
**மெய்கண்ட தேவன் வாழ்க.**
**முற்றிற்று**

# 11. உலகத் தோற்றமும் ஒடுக்கமும்

நித்தமாய் அருவாய் ஏகநிலையதாய் உலகத்திற்கோர்
வித்துமாய் அசித்தாய் எங்கும்வியாபியாய் விமலனுக்கோர்
சத்தியாய்ப் புவனபோகந்தனு கரணமும் உயிர்க்காய்
வைத்ததோர் மலமாய்மாயை மயக்கமும் செய்யுமன்றே.

**சிவஞானசித்தியார் சுபக்கம் அ 3 சூ 53**

மாயை உலகிற்கு முதற்காரணமெனப்படும். மாயையானது நித்தியமாயும் அருவமாயும் ஒன்றாயும் சடமாகியும் வியாபகமாகியும் சிவபெருமானுக்கோர் பரிக்கிரக சத்தியாயும் (வேண்டும் போது உபகாரப்படும் சத்தி) தனுகரணபுவன போகமுமாய் உயிர்களின் பொருட்டு விரிந்ததோர் மலமாகியும் மயக்கமும் செய்யும். ஒன்றாயென் றால் அணுக்களுடைத்தாயிராமை அணுக்கள் மாயை யிலிருந்து தோன்றும் காரியப் பொருளாதலால் அவை உலகிற்கு முதற் காரணமாகா.

### வினைப்போகமே தேகம்

தத்தம் வினைக்கீடாக உயிர்கள் அச்சுமாறி மற்றொரு யோனியிற் பிறக்கின்றன. தூல உடம்புகள் சூக்கும உடம்பி லிருந்து தோன்றுகின்றன. தூல உடம்பிற்கு முதற் காரணம்

சூக்கும உடம்பு, இதற்கு முதற்காரணம் மூலப் பிரகிருதி, இதற்கு முதற்காரணம் மோகினி, சுத்தமாயை மேற்சொல்லிய யாவற்றையும் வியாபித்து நிற்கும் இவ்விரு வகைப் பிரபஞ் சமும் ஆன்மாசிவத்தினை சார்தற்கேதுவாகிய பக்குவகாலம் அமைதற் பொருட்டு உள்ளன.

**ஆணவம்-தீர்வு:**

அழுக்குடைய மெல்லிய ஆடையின் அழுக்கை ச்சாணி உவர்மண் முதலிய அழுக்கைக் கொண்டு முழுவதும் நீக்குதல் செய்யும் வண்ணான்போல் சிவபெருமான் ஆணவமலத் தினைத் தீர்ப்பன். இச்செயலையே,

''..........வல்வினையேன்றன்னை
மறைந்திட மூடிய மாய விருளை
அறம்பாவமென்னு மருங்கயிற்றாற் கட்டிப்
புறந்தோல் போர்த் தெங்கும் புழு வழுக்கு மூடி
மலஞ்சோரு மொன்பது வாயிற் குடிலை
மலங்கப்புலனைந்தும் வஞ்சனையைச் செய்ய
விலங்குமனத்தால் விமலாவுனக்குக்
கலந்தவன் பாகிக் கசிந்துள்ளுருகும்
நலந்தான் இலாத சிறியேற்கு நல்கி'' -

=திருவாசகம்-சிவபுராணம்

**கூட்டுவிப்பான் உடல்**

வினைக்கீடாக அவ்வவ்வுயிர் யோனியின் மாறிப் பிறத்தலன்றி அச்சுமாறி மற்றொரு யோனியிற் பிறத்தலில்லை என்பார்க்குக் கன்ம நுகர்ச்சியாகும் வழி எங்ஙனம்.

வினைகள் சடமாகலின் அவ்வவற்கீடாய தனுக்களை யும், புவனங்களையும் நேராக அறிந்து சென்று அடைய



மாட்டா. உயிர்களும் சேதனமாயினும் தமக்கென அறிவின் மையான் அவை அவற்றது பயனை அறிந்தெடுத்துக் கொண்டு நுகரமாட்டா. இங்ஙனமாதலின் மாயை வினை களைக் காரியப்படுத்தி உயிர்கட்குச் சேர்த்தலும் இறைவனே என்பது மேற் பாரிசேட அளவையால் (Principle of Elimination) பெறப்பட்டமையின் அஃது உயிர் முதலியவற்றின் செயலன்மையான், இறைவன் செய்த எவ்வகை அச்சையும் உயிர்கள் வினைக்கேற்ப இறைவன் மாற்றுவன். ஆதலின் அதன் கண் ஆசங்கை என்னை?

**பரிணாமக் கொள்கை**

மேலும் சார்ல்ஸ் டாவின் (Charles Darwin 1809-92) அவர்களின் உயர் இனங்களும் இனவகைகளும் (அச்சு மாறாமல்) படிமுறை வளர்ச்சிமாறுபாடுகளும் உயர்வும் பெற்றன என்ற உயிரியல் கோட்பாட்டுக் (Evolution) கொள்கையும் இங்ஙனம் மறுக்கப்படுகிறது. இக்கூற்று சமயநூல்கட்கும், காட்சியளவை, உரையளவை என்னும் மூன்றற்கும் விரோதமாம். புண்ணியம் செய்தவர் சுவர்க்கம் சென்று சுவர்க்கபோகம் (இன்பம்) அனுபவிக்கையில் தேவராயன்றி மனிதராயிரார். அங்கு போகநுகர்வு இறுதியடைந்ததும் திரும்பிவந்து பிறக்கும் போது தேவராய்ப் பிறவாது மனிதராய் பிறப்பர். ஆதலினால் மனிதர் தேவராயும் தேவர் மனிதராயும் பிறப்பர் என்பது வெளிப்படை.

ஆணவ மாயையுங் கன்மமு மாமலங்
காணுமுளைக்குத் தவிடுமி யான்மாவுந்
தாணுவை யொவ்வாமற் றண்டுல மாய்நிற்கும்
பேணுவாய் மற்றுநின் பாசம் பிரித்தே

=திருமந்திரம்-2192

### பொதிவகை

ஆணவம் உமியையும், கன்மம் முளையையும், மாயை தவிட்டையும் ஒக்கும், ஆணவம் வலுநீக்கம் வரை மாயையும் கன்மமும் ஆன்மாவுக்கு வேண்டப் பெறும் ஆன்மா பாசங்களை நீங்கச் செய்ய இறைவனது திருவடியைப் பற்றவேண்டும். ஆன்மா சிவத்தைப் போல வியாபகம் பெறாமல் உமி முதலியவற்றால் மூடப்பெற்று உள்ளிருக்கும் அரிசி போல நிற்கும்.

### ஒன்றே - மூன்றே

மாயை ஒன்றானாலும் செயற்படுமுறையில் மூன்றாகும். அவையாவன - சுத்தமாயை, சுத்தா சுத்தமாயை அல்லது மிச்சிரம் (கலப்பு), அசுத்தமாயை.

அவற்றுள் மல கன்மங்களோடு விரவாது முதற் காரணமாய் நிற்பது சுத்த மாயையென்றும் அஃது ஏனை இரண்டனையும் வியாபித்து நிற்கும்.

விந்துவின் கீழாயடங்கி மல கன்மங்களோடு விரவி முதற் காரணமாய் அசுத்த மாயையாகியும், அவ்வசுத்த மாயையினது தூலபரிணாமமாய்த் தோன்றுவது பிரகிருதி மாயையென்றும் கூறப்பெறும்.

அம்மூன்றனுள் சுத்தமாயையினின்றுஞ் சங்காரமுறை பற்றி வைகரி முதல் வைத்தெண்ணப்படும் நாலு வாக்கும் தோன்றும்.

அசுத்த மாயையினின்றுஞ் சங்காரமுறை பற்றி அராகம் முதல் வைத்தெண்ணப்படும் காரண தத்துவம் ஐந்தும் தோன்றும்.

பிரகிருதி மாயையினின்றுஞ்சிருட்டிமுறை பற்றிக் குணதத்துவ முதல் வைத்தெண்ணப்படும், போக்கிய தத்துவம்



இருபத்து நாலுந்தோன்றும்.

இங்ஙனஞ் சடரூபமான விந்து, மோகினி, மான் மூன்றுந் தத்தங்காரியங்களைச் சிவனவன் தன் சந்நிதி தன்னின் நின்றே சிவசத்தி சங்கற்ப ரூப சந்நிதியினின்றும் தோற்றுவிக்கும்.

அனந்தர், சீகண்டர் செய்யும் தொழிலுஞ் சிவ சந்நிதியையின்றி அமையாவென்னும் கருத்தான் மூன்றற்கும் சிவ சந்நிதியே கூறப்பட்டது.

ஐந்துசுத் தத்தின் கீழ் ஏழ் சுத்தாசுத் தம் அசுத்தந்
தந்திடும் புமான்கீழ் எண்மூன்றாயதத்துவஞ்சீவர்க்கு
வந்திடும் பிரேர காண்டம் மருவபோக சயித்திரத் தோடு
அந்தமில் அணுக்களுக்குப் போக்கிய காண்டம் ஆமே''

=சிவஞான சித்தியார் சுபக்கம் - அ. 3 :செ.70.

இத்தத்துவம் முப்பத்தாறனுள் முதல் ஐந்தும் சுத்தம், நடுவண் ஏழும் சுத்தாசுத்தம் அல்லது மிச்சிரம், பின்னுள்ள நான்கும் அசுத்தமெனவும் முறையே பிரேரகாண்டம், போக சயித்திருகாண்டம் போக்கிய காண்டமெனவும் காரணக் குறிபெற்று முத்திறப்படும் இதனால் அம்முப்பத்தாறு தத்துவமும் மூவினமாதல் கூறப்பட்டது.

-----------

*குறிப்பு-பிரேர காண்டம் - மற்றை தத்துவத்துங்களைத் தொழிற் படுத்தலுக்கு வேண்டிய தத்துவக் கூட்டம். போகசயித்திரு காண்டம் - போகத்திற்கு ஏதுவாகிய தத்துவக் கூட்டம் . போக்கிய காண்டம் - அனுபவிக்கப்படும் தத்துவக் கூட்டம்.*

### மாயை - மருவு பெயர்

- சுத்தமாயைக்கு விந்து, குடிலை, குண்டலினி, மகாமாயை, ஊர்த்துவமாயை என்றும் பெயர்கள் உண்டு.

- அசுத்தமாயை மயக்கத்தைத் தருவதால் மோகினி என்றும் அழைக்கப்படும். (சிலர் அசுத்தமாயையிலுள்ள மாயை என்னும் தத்துவத்தையே மோகினி என்று கூறுவதுண்டு)

''தூலமாம் உருவினுக்குச் சூக்குமம் முதல்; அதற்கு
மூலம் மான்; அதற்கு மூலம் மோகினி....''

=சிவஞான சித்தியார் சுபக்கம் அ.2 : செ.50

பொருள்: மான் என்பது மூலப் பிரகிருதி தூல உடம்பிற்கு முதற்காரணம் சூக்கும உடம்பு. அதற்கு மூலம் மான் (பிரகிருதி மாயை). அதற்கும் மூலம் மோகினி (அசுத்தமாயை)

**மாயா தத்துவம் நாலாறாவன**

அசுத்த மாயை தத்துவங்கள் 24 அவையாவன, அந்தக்கரணங்கள் 3, ஞானேந்திரியங்கள் 5, கன்மேந்திரியங்கள் 5, தன்மாத்திரைகள் 5, பூதங்கள் 5, குணதத்துவம் -1.

உலகம் அசுத்தமாயையிலிருந்து தோன்றுகிறது அசுத்தமாயையிலிருந்து - காலம், நியதி, கலை என்னும் தத்துவங்கள் தோன்றும்.

காலம் - இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் என முத்திறப்பட்டு சிவனது ஆணையினால் உலகத்தைத் தோற்றுவித்து, காத்து, அழிக்கும். நியதிதத்துவம் - அக்காலத்தின் பின்னாக மாயையினின்று தோன்றி அவரவர் செய்த கன்மம் அவரவரே நுகருமாறு நியமிக்கும்.

அதன்பின் அம்மாயையினின்றே கலைதோன்றி ஆணவத்தை ஏகதேசத்தின் (சிறுபாகம்) நீக்கி, ஆன்மாவின் கிரியா சத்தியை விளக்கி, வினைக்கீடாக வரும் போகத்திற்



செலுத்தி நிற்கும்.

அக்கலையினின்று வித்தை தோன்றி அவ்வான்மாவினது ஞானசத்தியை ஏகதேசத்தில் விளக்கி அதன் கண் செலுத்திநிற்கும்.

அவ்வித்தையினின்றும் அராகம் தோன்றி இச்சாசத்தியை விளக்கி வினைவழி அப்போகத்திற் செலுத்திநிற்கும்.

காலம், நியதி, கலை, வித்தை, அராகம் ஆகிய ஐந்து தத்துவங்களும் ஆன்மாவுக்கு, உட்சட்டையாக அமையும்.

இச்சட்டை *கஞ்சுகசரீரம்* என்று சொல்லப்படுகிறது. அநாதி கேவலத்தில் எவ்விதவுடலுமின்றிக்கிடந்த ஆன்மாவுக்கு முதலில் அசுத்தமாயையிற் கலக்குண்ட பாகம் பொதுச் சரீரமாக அமைகிறது. இதனைக் காரண சரீரம் எனக் கூறுவர். அடுத்துக் கஞ்சுகசரீரம் சிறப்பு வகையான் அமைகிறது.

இக் கஞ்சுக சரீரமுள்ளவுயிர் இச்சாஞானக்கிரியை முதலிய மூன்றனையும் ஏகதேசத்தின் மருவி பொது வகையால் புருடதத்துவமெனப் பெயர் பெற்று அப்போகத் தில் முதல்வன் ஆணையால் புருடனாகிநிற்கும்.

அதன்பின்பு மூலப்பிரகிருதி கலையினின்றும் அவ்வியத்த (வெளிப்படாதிருத்தல்) குணவடிவாய்த் தோன்றி அதன்கண் நின்றும் வியத்தமாய் (வெளிப்படுதல்) தரப்படும்,

சாத்துவிகம், இராசதம், தாமதம் என்னும் (முக்குண வடிவாய்) மூவகையாய் அவற்றுள் ஒவ்வொன்றும் முத்திறப் பட்டு ஒன்பது வகையாய் நிற்கும். அவையாவன - சாத்துவிதத்தில் சாத்துவிதம், சாத்துவிதத்தில் இராசதம், சாத்துவிதத்தில் தாமதம், இராசதத்தில் சாத்துவிதம், இராசதத்தில் இராசதம், இராசதத்தில் தாமதம், தாமதத்தில் சாத்துவிதம், தாமதத்தில் இராசதம், தாமதத்தில் தாமதம் என்பன போகத்திற்குச் சாதனமாயதன்கண் தோன்றும் புத்திமுதலியதத்துவங்களும் குணவடிவேயாய் உயிரைப்

பந்திக்கும் அதனால் போக நுகருமிடம் எங்கணும் உயிரும் அக்குணவடிவாய் நிற்கும்.

மூலப்பிரகிருதியிலிருந்து குணதத்துவம் மாத்திர மன்றி விபரீத உணர்வுக்குக் காரணமாகிய அவிச்சை (அஞ்ஞானம்) வினையும் தோற்றுவிக்கும்.

புத்தி அவ்வியத்தில் தோன்றி அதன்பின் புத்திதத் துவம் அந்தக் குணதத்துவத்தினின்றுந் தோன்ற அவ்வுயிர்கள் செய்த புண்ணியபாவங்கள் தன் பால் சாரப்படுதலும், அவ்வினைக் கீடாகவந்த விடயத்தை இஃது இன்னதென நிச்சயித்தலும், நிச்சயித்தபின், சுகதுக்க போக வடிவாய் பரிணமித்தும் உயிரின் அறிவு தொழில்கட்கு விடயமாகியும் நிற்கும்.

புத்தியின் கண் ஆங்காரம் தோன்றும், என்னோடொப் பார் இல்லையென அகந்தைப்படுதற்குக் காரணமாய் வாயிற் காட்சிக்கு விடயமாய்த் தோன்றிய தொன்றனை இஃது இன்னதென்று புத்தித்தத்துவம் நிச்சயிக்கும் படியாக யானென்றும் எனதென்றும் அதன்கண் ஒருமைப் பட்டு எழுந்து ஆன்மாவோடு வேற்றுமையின்றி நிற்கும். அதுவும் குணவேற்றுமை பற்றிப் பூதாதி முதலிய வேறுபாட்டால் முத்திறப்படும்.

ஆங்காரம் -- பூதாதி ஆங்காரம், வைகரி ஆங்காரம், தைசத ஆங்காரமென முத்திறப்படும். அம்மூன்றனுள், தைசத ஆங்காரத்தினின்றும் மனம் தோன்றி எதிர்ப்பட்ட தொருவிடயத்தை இஃது யாதோ வெனச் சித்தரூபமாய் நின்று சிந்தித்தும் பின்னர் ஐயுற்று நிச்சயிக்கவும் விரும்பும். மனதின் பின்னதாக ஞானேந்திரியங்களும் அத் தைசத ஆங்காரத் தின்னின்றே தோன்றும். ஏனை வைகரி ஆங்காரத்தினின்றுங், கன் மேந்திரமைந்துந்தோன்றும்.



--------

*குறிப்பு. விபரீத உணர்வு-ஒன்றை வேறு ஒன்றாக அறிதல், வாயிற்காட்சி - ஐம்பொறிகளால் காணுதல்.*

## இந்திரியம்

காது, கண், தோல், நாக்கு, மூக்கு என்பனவும், வாய், கால், கை, எருவாய், கருவாய் என்பனவும், முறையே ஞானேந்திரியங் களும் கன் மேந்திரியங்களுமாம்.

## விடயம், கருவிகள்

பரிசம், இரதம் , ரூபம், கந்தம், சத்தம் என்பன ஞானேந்திரியங்களுக்கு விடயங்களாம். வசனம், கமனம், தானம், விசர்க்கம் ஆனந்தமென்பன கன்மேந்திரியங்களுக்கு விடயங்களாம். ஞானேந்திரியங்களும் கன்மேந்திரியங் களும் புறக்கருவிகள்.

அவ்விருவகை இந்திரியங்களும் ஒன்றனை விடயிக் கலுறுவார்க்கு உடம்பின் புறத்தே தோன்றி விடயிக்கும். மனம், புத்தி, சித்தம், ஆங்காரம், அவ் இந்திரியங்களால் தரப்பட்ட விடயத்தை உடம்பினகத்தே நின்று விடயிக்கும் உட் கருவிகள். ஏனைக்கலாதிகளாவன அவ்வந்தக் கரணங்களான் விடயிக்கப்பட்டுவந்த பயனை ஆத்மாவின் இச்சா ஞானக் கிரியைகட்குப் பொருந்து வனவாய் உள்ள அந்தக் கரணங்களாம். இவை தம்முள் வேற் றுமை யாகலின் இம் முத்திறக் கருவிகளும் ஒருதலையான் வேண்டப்பட்டு உயிரைப் பந்தித்து நிற்கும். அவ்விரு வகை இந்திரியங் களும் தோன்றிப் பின் ஏனைப் பூதாதி ஆங்காரத்தினின்றும் ஓசை, பரிசம், ரூபம், இரதம், கந்தங்கள், முதலிய தன் மாத்திரைகள் தோன்றி அவ்விந்திரியங்கள் தத்தம் விடயங்களை விடயிக் கு மாறு ஊக்குவித்து உடனிற்கும்.

இத்தன் மாத்திரைகள் ஐந்தும், மனம் புத்தி, ஆங்காரம் என்னும் எட்டும் கூடிப் புரியட்டக அல்லது சூக்கும உடம்பெனப்படும்.

சத்தம் முதலிய தன்மாத்திரைகள் ஐந்தினும் நின்று முறையே வான், வளி, தீ, நீர், நிலம், முதலிய தூல பூதங்கள் ஐந்தும் தோன்றி அவற்றுடன் பிரிப்பின்றி முறையே ஒன்றற்கொன்றேற்றமாகிய சாத்துவிதம் முதலிய குணங்கள் வியத்தி ரூபமாக உடையனவாய் நிற்கும். இவ்வைம்பெரும் பூதங்கள் தன் மாத்திரையோடு கூடி நின்று இந்திரியங்களின் தொழிற்பாட்டை ஊக்குதற்கு இவற்றின் காரிய பூதங்களாகிய தாத்துவிகங்கள் அறுபதும் (60) அங்கம்அங்கி முறைமைய னவாய் உடனிற்கும்.

-----------

*குறிப்பு: அங்காங்கி - உபாங்கம்.*

**பூதத்தியல்**

ஐம்பெரும் பூதங்களுள் ஆகாயமானது இடங் கொடுத்தலாகிய குணமும், தொழிலும், உடையதாம், வாயு வானது சலித்தல் பரந்தவற்றைத் திரட்டுதலாகிய குணமும் தொழிலும் உடையதாம், தீ சுட்டு ஒன்றுவித்தல் ஆகிய குண மும் தொழிலும் உடையதாம்,

நீர்-இடைவிடாது குளிர்தலாகிய குணமும் பதஞ் செய்தலாகிய தொழிலும் உடையதாம், மண்ணானது வலிதருதற்கு ஏதுவாகிய கடினமாதல், தரித்தலுமாகிய (தாங்குதல்) குணமும் தொழிலும் உடையதாம்.

நிலம், நீர், தீ, வளி, வெளியாகிய ஆகிய ஐம் பெரும் பூதங்களின் வடிவம் முறையே நாற்கோணமும், தண்பிறை போலும் இருகோணமும், முக்கோணமும், அறுகோணமும், வட்டமுமாம்.



பொன்மையும், வெண்மையும், செம்மையும், கருமையும், புகையுமாகிய ஐவகை நிறங்களுமாம் .

எழுத்துக்கள் (பீசங்கள்) முறையே ல,வ,ர,ய, வெள என்பனவும்.

குறிகள் (அடையாளம்) வச்சிரமும், தாமரையும், சுவத்திகமும், அறுபுள்ளியும், அமுதவிந்து எனபனவுமாம்.

அதிதெய்வம் முறையே அயன், மால், உருத்திரன், மகேசன். சதாசிவன் என்பவராம்.

நிவிர்த்தி, பிரதிட்டை வித்தை, சாந்தி, சாந்தியாதீதம் என்னும் கலைகளுக்கும் மேற்சொல்லியவாறே வடிவம் பீசம் அடையாளம், அதிதெய்வம் என்பன சொல்லப்படும்.

சுத்த தத்துவம் என்று முன்னமே சொன்ன ஐந்தும் ஈண்டும் கூறிய தத்துவம் முப்பத் தொன்றும் உள்பட தத்துவங் கள் முப்பத்தாறாம்.

**சைதன்யம்**

அவற்றுள் முதல் ஐந்தும் சடமாயினும் சிற் சத்திக்குச் சுதந்தரவடிவாதலினால், சைதன்னியம் எனப்படும்.

புருட தத்துவம் சார்ந்ததன் வண்ணமாய் நிற்பதனால் சதசத்துதென்றும், ஏனை முப்பது தத்துவங்களும் அசித்தென்றும் சொல்லப்படும்.

இத்தத்துவம் முப்பத்தாறுனுள் முன் ஐந்தும், நடுவண் ஏழும்,பின் இருபத்துநான்கும், முறையே சுத்தம், சுத்தாசுத்தம் அல்லது மிச்சிரம், அசுத்தமெனவும் உயிர்கள் அனுபவத்திற்கு ஏதுவாகும் பிரேர காண்டம் பொருந்திய போக காண்டம் போகசயித்திருகாண்டத்துடன் எண்ணிலாத, உயிர்களுக்குப் போக்கிய காண்டமெனவும் காரணக்குறிபெற்று முத்திறப் பெறும்.

இம்முப்பத்தாறு தத்துவமும் தூலதத்துவம், சூக்கும தத்துவம், அதிசூக்கும தத்துவமென ஒரோவொன்றும் மூவகைப்பட்டு பொதுவும், பொதுச்சிறப்பும், சிறப்புமாய் நிற்கும். இத் தன்மையுள்ள தத்துவங்களை அதிட்டிக்கும் அணு பக்க சம்பு பக்கத்து அதிதெய்வங்களும் அவ்வத் தத்துவப் பெயர் பெறுமாகலான் எல்லாப் பொருள்களையும் தத்துவங்களில் வைத்து காண்க. எனவே இத்தத்துவ முப்பத் தாறும் உணர்ந்தானுக்கு எல்லாப் பொருளும் இனிது விளங்கும்.

மேற்கூறிய பொருளனைத்துஞ் சிவாகமங்களில் விரித்துக் கூறப்பெறுகிறது.

### புனர் உற்பவங்கள் ஆனவை

இம்முப்பத்தாறு தத்துவங்களும் சங்காரகாலத்துத் தத்தங் காரணங்களின் ஒடுங்கும்வழி - நிலன் மூலப்பகுதி ஈறாகி இருபத்து நான்கு தத்துவங்களும் சீகண்டருத்திரனால் ஒடுங்கும். மூலப் பகுதிக்கு மேலுள்ள ஆறுதத்துவங்களும் வித்தையீசராகிய அனந்தரால் ஒடுங்கும். அவற்றின் மேலுள்ள சுத்த வித்தை முதலிய மூன்று தத்துவமும் இலயத்தில் நின்ற சிவனால் ஒடுங்கும். ஏனைச் சத்திதத்துவம் சிவதத்துவம் இரண்டும் சுத்தமாம் சிவத்தின் ஒடுங்கும். இவை புனருற்பவங்களானவை அவ்வவை அவ் அவரால் ஆம். இவருட் சுத்தசிவன் ஒருவனே நித்தியன். ஏனை மூவரையும் நித்தியர் என்பது உபசாரம்.

சாருவாகம் முதல் ஐக்கிய வாத சைவம் ஈறாகிய புறப்புறச் சமயமும் புறச்சமயமும் அகப்புறச்சமயமும் என்னும் முக்கூற்றுச் சமயத்தெய்வங்களெல்லாம் பூதமுதல் அசுத்தமாயாத தத்துவம் ஈறாக ஒவ்வொரு தத்துவங்களில் நிலை பெறும்.



சிவாகமங்களுட் கூறப்படும் ஏகன், அனேகன், இருள் கருமம், மாயையிரண்டும். என்னும் ஆறு பொருட்கும் உண்மைத்தன்மை விளக்குகின்ற சைவம் எனப்படும் தலையாகிய அறுவகைச் சமயத் தெய்வமாய் நின்ற அதிகார போக இலய சிவபேதங்கள் சுத்தவித்தை முதலியவாகப் பொருந்திய ஐந்து தத்துவங்களுள் ஒவ்வொன்றின் நிலைபெறும், சித்தாந்தசைவத்தெய்வமாகிய சுத்தசிவம் இம்முப்பத்தாறையும் கடந்து நிற்கும்.

## பவன் பிரமசாரியாகும் பன்மொழி கன்னியாகும்

### ஏகன் - செயல்

அங்ஙனம் ஏக நாதனாய் நிற்கும் சிவபெருமான் ஒன்றின் ஒன்றாய்ப் பவந்தரும் - சிவம், சத்தி, நாதம், விந்து, சதாசிவன்,மகேசுரன், உருத்திரன், மால், பிரமா ஒன்றின் ஒன்றாகத்தோன்றி ஒவ்வொரு தத்துவங்களில் நின்று கொண்டு தத்தந் தொழில்களைச் செய்யும். சிவம் சத்தி, நாதம், விந்துவாகிய அருவத் திருமேனி நான்கும், மகேசன், உருத்திரன், மால், அயனாகிய உருவத்திருமேனி நான்கும், சதாசிவமாகிய அருவுருவத்திருமேனி ஒன்றும் ஆகிய முத்திறத்து 'நவம் தருபேதம் ஏகநாதன் நடிப்பன் என்பர்'- ஒன்பது வர்க்கத்திலும் வேற்றுமையின்றி நின்று அவ்வத் தொழில்களைச் செய்வன்.

### எழுவர்க்குரிய சத்தியர்

மேற்கூறிய சிவபேதம் ஏழனுக்கும் உரிய சத்திபேதம் முறையே சிவத்திற்குச் சத்தியாகியும், நாதத்திற்கு விந்து வாகியும், சதாசிவத்திற்கு மனோன்மணியாகியும், மகேச னுக்கு மகேசையாகியும், உருத்திரனுக்கு உமை ஆகியும்,

மாலுக்குத் திருவாகியும், அயனுக்கு வாணியாகியும் எழுவகைப்படும்.

எம்மிறைவனாகிய பரமசிவன் சிவபேதம் ஏழினும் நின்று நடாத்துமாறெல்லாம் அவனோடு தாதான்மியமாய், நீங்காது, நிற்கும் பராசத்தியும் இச்சத்திபேதம் ஏழினும் அவனுக்குத் துணையாய் நின்று நடாத்தும்.

சிவமும்,அந்தச் சத்தி முதலியவற்றை அதிட்டித்து நிற்கும். மரமும் வயிரமும் போல் ஒப்ப இயைந்து நிற்றலின் எல்லாத் திருமேனியுஞ் சத்தி, சிவம் இரண்டிற்கும் பொது வடிவேயாமாயினும் சிவனுக்குச் சத்தி, தேவியும் ஆகையால் அதற்குரிய வடிவு விசேடம் ,குணவிசேடம் பற்றிச் சிவபேதம் சத்தி பேதம் என்றாயின.

சிவதத்துவத்தினின்று சத்தி தத்துவம் தோன்றியும் சத்திதத்துவத்தினின்று சிவம் (சதாசிவம்) தோன்றியும் (சத்தி தத்துவத்தினின்று சாதாக்கிய தத்துவம்தோன்றியும் இருவரும் கூட இவ்விடத்துச் சடமும் சேதனமுமாய் பிரபஞ்சமெல்லாம் தோன்றியும், சிவன் பிரமசாரி ஆவன். சிவசத்திகன்னிகை ஆவள். முதல்வன் அருள்பெற்ற ஞானிகட்கு இத்தன்மைதான் தெரியும்.

சத்தியுஞ் சிவமுஞ் செய்யும் இச்செயல்கள் எல்லாம் நம்மனோர் பொருட்டாக நடித்துக் காட்டும் நாடகமேயன்றிப் பிறிதில்லை.

சிவாலயங்களின் நடத்தப்படும் நித்தியப் பள்ளியறை உற்சவமும், ஆண்டுப் பெருவிழாவில் இடம் பெற்று நடத்தப்பெறும் திருக் கல்யாண வைபவமும் இவற்றை விளக்குவன.

தனுகரண புவனபோகங்களும், அவைமூலமாயுள்ள பெத்த முத்திகளும், அப்பெத்தமுத்திகளிற்படும் பேதங்கள் அனைத்தும் மேற்கூறிய தத்துவங்களால் ஆயின என்றும்,



அத்தத்துவங்கள் உயிர்களோடியையவன அன்றி முதல் வனோடு இயைவன அல்ல என்றும், நன்குணர்ந்து அத்தத்துவங்களைக் கழியு முறைமையின் வைத்துக் கழித்து அவற்றிற்கு மேலாய் நிற்பது ஒன்றனை ஐயந்திரிபின்றி உணரப்பெற்றோன் அவன் சிவன் பிரமசாரியும் அம்பிகை கன்னியுமாமென்னும் அவ்வுண்மையறிவுடையனாவன். இரு வினைகளை நுகர்வித்து நீக்குதற் பொருட்டும் அதனால் உயிர், பருவம் எய்திய வழி மேலைக்கு வித்தாகாதவாறு தீக்கையால், அவற்றை முதிர்வித்துப் பற்றறக் கழித்தற் பொருட்டும் சகல தீமைகளுக்கும் காரணமாகிய ஆணவ மலத்தைப் போக்குதற் பொருட்டுமாம்.

### ஆணவ மலம்

ஆணவ மலமானது எண்ணிறந்த சத்தி உடையதாய் எண்ணிறந்த உயிர்களிலும் செம்பிற்களிம்பு போல் அநாதியே சேர்ந்துநின்று கேவலத்தில் எவ்வுயிர்களின் அறிவொடு தொழில்களை மறைத்து நின்று போத்திருத்துவத்தை நிகழ்த்தி எஞ்ஞான்றும் காரணமாய் நின்று,அஞ்ஞானத்தை நிகழ்த்தும். ஆணவமலம் உயிரோடு ஒன்றித்து நின்று, அறிவு இச்சைச் செயல்களை மறைப்பதாகிய மலத்துக்கு, வேறுநின்று அவற்றை விளக்குவதாகிய மாயைக்கும் தம்முள் வேற்றுமை பெரிது.

### பந்திப்பன பெரிதும்

மேலே நல்வினை தீவினையெனக் கூறப்பெற்ற கன்மமலமும் அதன்பின் நித்தமாய் அருவாய்எனக் கூறப் பெற்ற மாயாமலமும் இவ்விடத்துக் கூறப்பெற்ற ஆணவ மலமுமாகிய இம்மூன்று மலங்களும் நெல்லுக்கு முளை, தவிடு உமிபோல் உயிரைப் பந்தித்து நின்று முறையே

போகமும், பந்தமும், போத்திருத்துவமும் பண்ணுவனவாம்.

கன்ம மலம் போகம் பண்ணுதலாவது நெல்லின் கணுள்ள முளைத்தற் சத்திமுளையைத் தோற்றுவித்தல் போல் உயிரின்கட் சுகதுக்கங்களை முதற்காரணமாய் நின்று தோற்றுவித்தல்.

மாயாமலம் பதஞ்செய்தல் என்பது முளைத்தற்கு அனுகூலஞ் செய்து உடன் நிற்கும் தவிடுபோல அச்சுகதுக் கங்கள் அங்ஙனம் தோன்றுதற்குத் துணைக் காரணமாய்த் தன் காரியமாகிய தனுகரணம் முதலியவற்றையும் உயிரையும் இயைவித்து நிற்றல்.

ஆணவமலம் போத்திருத்துவம் செய்தலாவது அம்முளை அங்ஙனம் தோன்றுதற்கு நிமித்த காரணமாகிய உமி போல அத்தோற்றத்திற்கு நிமித்தகாரணமாயவற்றை முறுகுவித்து நின்று அச்சுகதுக்கங்களை உயிர்நுகருமாறு நிலை பெறுத்திநிற்றல்.

**மாயேயம் - திரோதாயி**

வேறும் இருமலமெனப்படுவன-அச் சுகதுக்க விளைவுகட் கெல்லாம் இடமாய்நின்று வியாபக மாகிய ஆன்மாவின் அறிவிச்சைச் செயல்களை ஏகதேசப் படுத்து வதென மேலே சொல்லப்பட்ட மாயா காரியத்தை மாயேய மென்றும், பொருந்திய அவ்வம்மலங்களை அவ்வத் தொழிற்படுத்தி பாகம் வருவிக்கும் சிவசத்தியை மறைத் தலைச் செய்வதாகிய திரோதாயி என்றும் வேறே இரு மலங்கள் உள்ளன.

அவற்றுள் மாயாகாரியம் மாயையில் அடங்கு மாயினும் பந்தித்தலில் படும் வேற்றுமை பற்றி மாயேய மலமென வேறுவைத்து எண்ணப்படும்.



அம்மலங்கட்கு அனுகூலமாய் நின்று செய்யுஞ் சிவசத்தி பராசத்தியின் அடங்குமாயினும் தொழில் வேற்றுமை பற்றி திரோதாயியென வேறுவைத்து எண்ணப்படும்.

**மூன்றுடன் இரண்டு**

இவ்வைந்து மலங்கள் உயிர் தொறும் நின்று செய்யும் பந்தவேறுபாடு அறிதற்பாலது.

மேற்கூறிய பிறப்பிறப்புக்கள் எல்லாவற்றிற்கும் காரணம் இவ் ஐவகை மலங்களுமாம்.

ஆணவம், மாயை, கன்மம், மாயேயம், திரோதாயி யாகிய இவ் ஐவகை மலங்களும், ஆன்மாவின் மேற்கூறிய பிறப்பிறப்புக்கள் எல்லாவற்றிற்கும் காரணமாகும். இவ் ஆன்மாவானது நிலையில்லாத கொள்ளிவட்டமும் காற்றாடியும் போலக் கணப்பொழுதிற் சுழற்சியுற்று பிறப்பிறப்பில் தங்கி அல்லல்படும்.

**நால்வகைத் தோற்றம்**

முட்டையும், வியர்வையும், வித்தும், பையுமாக எண்ணப்படும் நால்வகைத் தோற்றத்து எழுவகைப்பிறப்பின் எண்பத்து நான்கு நூறாயிரம் யோனிபேதத்தினின்று விரிந்த பேதங்கள் அளவின்றி உள்ளன. அவற்றுட் பலவகைப்பட்ட யோனி பேதங்கள் ஒழிந்து அவ்வலமரலை நீக்குதற்கு வாயிலாகிய மானிடப்பிறவி எய்துதல் கடலைக் கையால் நீந்திக்கரையேறினவன் காரியத்தோடு ஒக்குமென்க.

------------

குறிப்பு- 'அலமருதல்' - பலமுறை சுழற்சியுறுதல்

### என்ன புண்ணியம் செய்வரோ?

அம்மானிடப் பிறவியினும் மானுடர் வாழ்கின்ற இவ்வுலகத்துள் நற்றமிழ், வேதாகமம், திருமுறை, மெய்கண்ட சாத்திரங்கள், திருவள்ளுவர் குறள் ஆகியவை வழக்கம் இல்லாநாட்டிலே பிறத்தல் நீங்கி அவை வழக்குடைய உத்தம நாடுகளில் தோன்றுதல். மிக்க புண்ணியத்தான் அமைவது ஆகும்.

புறச்சமயங்களிற் செல்லாது சைவசமயத்திற்குரித் தாய் சைவநற் குடும்பத்தில் உதித்து உயர்ந்த சித்தாந்த நெறியுணர்ச்சியாலே சிவபிரானை வழிபடப் பெறுவார் உள ராயின் ஆணவ மலத்தானாகிய அவ்வலமரலை நீங்கி வீடு பேறு எய்துவர்.

மானிடப் பிறவிதானும் வகுத்தது மனவாக்காயம்
ஆனிடத் தைந்தும் ஆடும் அரன்பணிக்காகஅன்றோ

=சிவஞான சித்தியார் சுபக்கம் 62

அவ் அரன் பணி பயன் படுதல் ஏனை உலகங்களில் கூடாமையால் மேலுலகத்துள்ள மாயோன் முதலிய தேவர் களும் தேசவிசேடமாகிய இம்மண்ணுலகத்தில் வந்து அச் சிவபிரானை அருச்சிப்பர்.

### பிறவி

மானுட யாக்கைத் அத்துணை பெருமை உள்ளதாயி னும் மாதாவினுடைய கருப்பத்தில் தானே அழிவதாயும் பிறந்த உடனே அழிவதாயும், பிறந்து சிறுகாலத்திருந்து அழிவதாயும், பாலனாய் அழிவதாயும், இளமையில் அழிவ தாயும், நரையுண்டாகி விருத்த தசையில் அழிவதாயும், இத் துணைப் பொழுது நிற்கும் என்று அறியவராது நீர்க் குமிழிபோல் எப்பொழுதும் அழிதல் தன்மை உடையது எனவே உள்ள போதே உய்யப் பார் என்க.



### என்று வருமோ இறுதி

''..................வார்கட லுலகினில்
யானை முதலா எறும்பீறாய
ஊனமி லியோனியி னுள்வினை யிழைத்தும்
மானுடப் பிறப்பினுள் மாதாஉதரத்
தீனமில் கிருமிச் செருவினிற் பிழைத்தும்
ஒருமதித் தான்றியின் இருமையிற் பிழைத்தும்
இருமதி விளைவின் ஒருமையிற் பிழைத்தும்
மும்மதி தன்னுள் அம்மதம் பிழைத்தும்
ஈரிரு திங்களிற் பேரிருள் பிழைத்தும்
அஞ்சு திங்களின் முஞ்சுதல் பிழைத்தும்
ஆறு திங்களினூறலர் பிழைத்தும்
ஏழு திங்களில் தாழ்புவி பிழைத்தும்
எட்டுத் திங்களிற் கட்டமும் பிழைத்தும்
ஒன்பதில் வருதரு துன்பமும் பிழைத்தும்
தக்க தசமதி தாயொடு தான் படும்
துக்க சாகரத் துயரிடை ப் பிழைத்தும்
ஆண்டுகள் தோறும் அடைந்தவக்காலை
ஈண்டியும் இருத்தியும் எனைப்பல பிழைத்துங்
காலை மலமொடு கடும்பகல் பசி நிசி
வேலை நித்திரை யாத்திரை பிழைத்தும்
கருங்குழற் செவ்வாய் வெண்ணகைக் கார்மயில்
ஒருங்கிய சாயல் நெருங்கியுள் மதர்த்துத்
கச்சற நிமிர்ந்து கதிர்த்து முன்பணைத்து
எய்த்திடை வருந்த எழுந்து புடைபரந்து
ஈர்கிடைபோகாவிள முலை மாதர்தம்

கூர்த்த நயனக் கொள்ளையிற் பிழைத்தும்
பித்தவுலகர் பெருந்துறைப் பரப்பினுள்
மத்தக் களிறெனும் அவாவிடைப் பிழைத்தும்
கல்வி யென்னும் பல்கடற் பிழைத்தும்
செல்வம் என்னும் அல்லலிற் பிழைத்தும்
நல்குர வென்னுந் தொல்விடம் பிழைத்தும்
புலவரம் பாய பலதுறைபிழைத்தும்
தெய்வமென்பதோர் சித்தமுண்டாகி
முனிவிலாததோர் பொருளது கருதலும்''

,திருவாசகம்=போற்றித்திருவகவல்

என வந்தமைகாண்க.

**அழிதல் இயலே**

அழியும்தன்மைய தாகிய அவ்யாக்கையில் உண் டாகிய அறிவுமோஎனில், விடயங்களை ஒவ்வொன்றாய் அறிவதன்றி ஒருங்கேயறியும் ஆற்றலிலது.

ஒவ்வொன்றாய் அறியும் போதும் தானறிவதனை விட்டுவிட்ட றிவதன்றி, இடைவிடாமல் அறியமாட்டாது.

**நில்லா மூன்று**

மேலும் உறக்கம் முதலியவற்றிலும் அறியமாட்டாது. இன்னும் யாக்கைக்குரிய செல்வம் நிலையுள்ளதன்று

இவ்யாக்கை நிலையாமை, இளமை நிலையாமை, செல்வம் நிலையாமைகளை, உணரவல்லார்க்கே அவற்றான் ஆகிய மையலை விடுதல் கூடும்.

அதிகாரஞ் செய்து செருக்குறுவார் செத்தாரின் வேறல் லர் என்பது அறிய வல்லார்க்கு, அதனால் ஆகிய மயக்கம் விடுதல் கூடும்.



பொருள் வாஞ்சையால் அந்நடைபிணங்களுக்குப் பின் சென்று நின்று ஏக்கறும் மாந்தரும் நடைபிணங்களே அன்றி வேறல்லர்.

இவற்றை உணரவல்லார் மேற்படிசிறுமை நீங்கி சிவபிரானை வழிபட்டுப் பெறும் இறவாச் செல்வத்தை எய்துவர்.

**திருச்சிற்றம்பலம்**
**மெய்கண்ட தேவன் வாழ்க**
**முற்றிற்று**

# பின் இணைப்பு

## 1. மேற்கோள் நூல்கள்

SIVAPATHASUNDARANAR, S. (1934) The Saiva School of Hinduism,

CAPRA, Frijof (1982) *The Tao of Physics*. Flemingo, London.

CHOWN, Marcus (1993) *After Glow of Creation - From the fire ball to the discovery of Cosmic ripples*, Arrow, London.

SAGAN, Carl (1995) *Cosmos*, Abacus, London

திருவள்ளுவர், *திருக்குறள்*

மாணிக்கவாசகர், *திருவாசகம்*

திருஞானசம்பந்தர், *முதல் திருமுறை*

மெய்கண்டார், *சிவஞான போதம்*

அருணந்தி சிவாசாரியார், *சிவஞான சித்தியார் - சுபக்கம்*

உமாபதி சிவாசாரியார், *சிவப்பிரகாசம்*

குமரகுருபரர், *சிதம்பர மும்மணிக்கோவை*

அருணாசலம், மு. (பதிப்பாசிரியர்) (1993) *ஒன்பதாம் திருமுறை, திருப்பல்லாண்டு*, சென்னைப் பல்கலைக் கழகம்.



## 2. அருஞ்சொல் அகராதி

அ - சிவன் (திருமந். 1751)
அக்கினி - தீ (மூவகை) ஆகவனீயம், காருகபத்தியம் தாட்சணாக்கினி
அக்கினி (மண்டலம் 3ல் 1) - யோகநிலை
அகம் - மனம்
அங்காங்கி - உபாங்கம்
அங்கி-தீ, சட்டை
அசுத்தம் - தூய்மை இன்மை -(மாயை 3ல்1)
அண்டசம் - முட்டையில் பிறப்பன
அத்தி - (நாடி 10ல் 1)
அத்துவிதம் - இரண்டறக் கலத்தல்
அத்துவா - வழி, படி
அந்தக்கரணம் (4) - உட்கருவி;
அப்பு - அம்பு - நீர் (பூதம் 5ல் 1)
அபானன் - (வாயு 10ல்1)
அமர்வாசயம் - இரைப்பை(ஆசயம் 5ல்1)
அயன் - பிரமன்
அர்த்தம் - பொருள் ( 'தர்மார்த்த காம மோட்சம்')
அராகம் - விருப்பு
அலம்புடை - (நாடி 10ல்1)
அலமருதல் - பலமுறை சுழற்சி உறுதல்
அவத்தை - 2, (5),7 என்ப
அவித்தை - அஞ்ஞானம் - அவிச்சை
அனந்த தேவர் - ஏகாதச உருத்திரருள் ஒருவர்
அன்னம் - சோறு - அன்னம் பானீயம்

சோறொடு நீரே
அன்னமய கோசம் - தூல உடல், பஞ்சகோசத்தில் ஒன்று,
'சோற்றாலடித்த சுவரு'
அனாகதம் (ஆதாரம் 6ல்1)
ஆக்கிராணம் - மூக்கு
ஆகம் - உடல்
ஆகாசம் - வெளி, விசும்பு
ஆங்கார தத்துவம் (3)
ஆங்காரம், அந்தக் கரணங்களில் ஒன்று
ஆசயம் - உட்புறப் பை, உறைவிடம்
ஆஞ்ஞை - ஆணை - (ஆதாரம் 6ல்1)
ஆணவம் - மூலமலம்
ஆதாரம் (6)
ஆதித்த மண்டலம் - (மண்டலம் 3ல்1)
ஆதித்தன் - கதிரவன், அதிதி மகன்
ஆன்ம தத்துவம்
ஆன்மா - உயிர் ( 3 வகை)
ஆனந்தம் - மகிழ்ச்சி
ஆனந்தமய கோசம் - பஞ்சகோசங்களில் ஒன்று
இச்சை - விழைவு
இடைகலை - (நாடி 10ல்1)
இடும்பை - உதாசீனம் - துன்பம்
இரசம் - இரதம் - சுவை
இராகம் (8)
இராசதம் (குணம் 3ல்1)
இந்திரிய வகை (2)
-கன்மேந்திரியம் (5)
-ஞானேந்திரியம் (5)



இருமை - இம்மை, மறுமை
இருவினை - நல்ல, தீய; இருள் சேர் இருவினை.
பிறப்புக்குக் காரணம் ஆம்,
பொன் விலங்கு, இருப்பு விலங்கு ஆம்
இல்லாடம் - நெற்றி
இலயம் - அழிவு, இரண்டறக் கலக்கை, அறிவு மட்டுமே
திருமேனியாக உள்ள கடவுள்
ஈசுவரம் - சுத்த தத்துவத்துள் ஒன்று
ஈடணை - ஏடணை - ஆசை (3)
'மூவேடணை என்று முடிந்திடுமோ'
உத்பீசம் - நிலம் பிளந்து மேல் எழுவ
செடி, கொடி, மரம்
நால்வகைப் பிறப்புள் ஒன்று
உதானன் - (வாயு 10ல் 1)
உபத்தம் - குறி, கருவாய்
உருத்திரன் - பதினொருவர்
உருவம் - ஒளி
உலோகம் - உலகம், கனிமம்
உலோபம் - கஞ்சத்தனம் -உடையான் லோபி,கருமி
ஓம் - பிரணவம் (அ,உ,ம)
கந்தம் - மணம்
கபாலம் - மண்டை
கமனம் - இயக்கம்
'மந்த கமனன்' - சனி
கரணம் - அந்தக் கரணம் (4)
கலை (5)
கன்மம் - வினை, செயல்
கன்ம விடயம்

கன்மேந்திரியம் (5)
காந்தாரி (நாடி 10ல் 1)
காமம் - பற்று
காமியம் - ஆசை
காலம் - (3) இறப்பு, நிகழ்வு, எதிர்வு
கிரிகரன் (வாயு 10ல் 1)
குகு (நாடி 10ல் 1)
குணம் (3)
குரோதம் - (பகை 6ல் 1)
கூர்மன் - (வாயு 10ல் 1)
கோசம் - சட்டை, கவசம் (5)
சக்கு - சட்சு - கண்
சகலர் (ஆன்மா வகை 3ல் 1)
ஆணவம், கன்மம், மாயை பொருந்தியவர்
சங்கற்பம் - எண்ணம், நியமம்
சங்கினி (நாடி 10ல் 1)
சடம் - தேகம்
சத்தி (3)
சத்து - அறிவது
முக்காலமும் உள்ளது
சத்தம் - ஓசை, ஏழு
சதாசிவம் - சிவ தத்துவங்களில் ஒன்று
சந்திர மண்டலம் (மண்டலம் 3ல் 1)
சந்திரன்
சந்நிதி - திருமுன்
சமானன் (வாயு 10ல் 1)
சராயுசம் - கருப்பையில் பிறப்பு (4ல்1
சலவாசயம் (ஆசயம் 5ல் 1)



சாக்கிரம் - விழிப்பு (அவத்தை 5ல் 1)
சாத்துவிகம் - (குணம் 3ல் 1)-மேன்மையானது.
சாதாக்கியம் - சிவம் + சத்தி ஐக்கியம்
சாந்தி
சாந்தியாதீதம்
சிங்நுவை (நாடி 10ல் 1)
சித்தம் - கருத்து
மனத்தின் விருத்தியான அந்தக்கரணங்களில் ஒன்று
சித்து - ஆன்மா; அறிவது
சிலேத்துமம் (நோய் 3ல் 1)
சிவ தத்துவம் (5)
சிவம்
சிவபெருமான்
சிவன் - அதிகார சிவன், இலய சிவன், போக சிவன்
சீ (ஸ்ரீ) கண்டர்
சுக்கிலம் (ஆசயம் 5ல் 1)
சுத்தம் - தூய்மை
சுத்த மாயா தத்துவம் (5)
சுத்த மாயை (மாயை 3ல் 1)
சுத்த வித்தை (5)
சுத்தா சுத்த தத்துவம் (7)
சுத்தி - தூய்மை
சுவாசம் - மூச்சு
சுவாதிட்டானம் (ஆதாரம் 6ல் 1) குய்யம்
சுபக்கம் - தன் சமயம் பற்றிக் கூறுவது
சுவர்க்கம் - துறக்கம், மோக்கம்
சுவேதசம் - புழுக்கத்துப் பிறப்பன
சுழுமுனை (நாடி 10ல் 1)-நடு நாடி

சூக்குமம் - நுண்மை
சூக்குமை (வாக்கு 4ல் 1)
சுழுத்தி - (அவத்தை 5ல் 1)
சைதன்யம் - அறிவு, ஆத்மா, கடவுள் தத்துவஞானம்
சொப்பனம் - கனவு (அவத்தை 5ல் 1)
சோத்திரம் - செவி
தத்துவம் - உண்மைத் தன்மை
தனஞ்சயன் ( வாயு 10ல் 1)
தனு - உடல்
தட்சிணா மூர்த்தி - 25 சிவமூர்த்தங்களில் ஒன்று
தாமதம் - மந்தம்
தானம் - ஈகை, இடம்
திதி - காத்தல்
திரயம் - மூன்று
தீரோதாயி - மறைப்பு
தீரோபவம்
துரியம் (அவஸ்தை 5ல் 1)
துரியாதீதம் - (அவத்தை 5ல் 1)
தூலம் - பருப்பொருள்
தூல வைகரி
தேயு - தீ (பூதம் 5ல் 1)
தேவ தத்தன் (வாயு 10ல் 1)
தைசதம்
தொக்கு - துவக்கு, தோல்
நாகன் (வாயு 10ல் 1)
நாசி - மூக்கு
நாடி (10)
நாதம் - ஒலி



நாதாந்தம்
நாபி - கொப்பூழ்
நியதி - பிறழா நிகழ்ச்சி
நிவர்த்தி (கலை 5ல் 1)
பகிர்வாசயம் (ஆசயம் 5ல் 1)
பசு - உயிர்
பஞ்ச கிருத்தியம் - ஐந்தொழில், இறைவற்கே உரியது.
பதம்
பரிசம் - தீண்டுதல்
பாணி - கை; பாணிக்கிரகணம் - கைத்தலம் பற்றல்.
பாதம் - கால்
பாயுரு
பாவனை
பிங்கலை (நாடி 10ல் 1)
பித்தம் (பிணி 3ல் 1)
பிரகிருதி
பிரகிருதி மாயா தத்துவம் (24)
பிரகிருதி மாயை (மாயை 3ல் 1)
பிரதிட்டா கலை
பிரமன் - அயன்
பிரளயாகலர் - ஆணவத்துடன் , மாயை பொருந்தியவர்
பிராணமய கோசம் - பஞ்சகோசங்களில் ஒன்று
பிராணன் - உயிர் (வாயு 10ல் 1)
பிருதிவி - நிலம் (பூதம் 5ல் 1)
பிருதுவி தத்துவம்
பிரேர காண்டம் - பிற தத்துவங்களைத் தொழிற்படுத்தும் தத்துவக் கூட்டம்.
புத்தி - அறிவு

புத்திரன் - மகன்
புருடன் - (நாடி 10ல் 1)
புவனம் - உலகம் (224)
பூதம் - பஞ்ச பூதம்
பூதாதி ஆங்காரம்
பெத்த ஆன்மா - பாச, பந்தத்தது
பைசந்தி- நினைவு ஓசை (வாக்கு 4ல் 1)
போக்கிய காண்டம் - அனுபவிக்கப் பெறும் தத்துவக் கூட்டம்
போதம் - துய்ப்பன (5 வகை)
போசயித்திரு காண்டம் - போகத்திற்கு ஏது ஆகிய தத்துவக் கூட்டம்
போத்திருத்துவம் - போகம் துய்க்கும் கர்த்தா; போக்தா
போதம் - அறிவு
பௌதிகம் - பூதங்களாலானது.
மகேச்சுவரன் - சிவ தத்துவங்களில் ஒன்று
மண்டலம் (3)
மணி பூரகம் (ஆதாரம் 6ல் 1)
மத்திமை வாக்கு - மிடற்று ஓசை (வாக்கு 4ல் 1)
மதம்
மந்திரம் - மறை மொழி
மலம் (3), (5)
மலவாசயம் (ஆசயம் 5ல் 1)
மனம்
மனோமயகோசம் - பஞ்சகோசங்களில் ஒன்று
மனோன் மணி - சதாசிவரின் சத்தியர்
மாயை (மலம் 3ல் 1) (3)
மாயேயம் - மாயையின் திரிபுகள்



மாற்சர்யம்
மிச்சிரம் - கலப்பு
மூலாதாரம் (ஆதாரம் 6ல் 1)
மேனி - நிறம், சரீரம்
மோகம் - கடும்பற்று; வெறி
வன்னம் - எழுத்து
வாக்கு (4)
வாதம் - காற்று
வாயிற் காட்சி - ஐம்பொறிகளால் காணுதல்
வாயு - காற்று (பூதம் 5ல் 1)
விகற்பம் - வேறுபாடு
விசர்க்கம் - நீக்கம்
விசுத்தி
விஞ்ஞானம்
விஞ்ஞான கலர் - ஆணவமலம் மட்டுமுள்ள ஆன்மாக்கள்
விஞ்ஞானமய கோசம் - பஞ்சகோசங்களில் ஒன்று
வித்தியா தத்துவம் (7)
வித்தை - விச்சை
விந்து - சிவதத்துவம், நவந்தரு பேதங்களில் ஒன்று புள்ளி, வட்டம்
வியத்தம் - வெளிப்பாடு
வியானன் (வாயு 10ல் 1)
வினை (2)
வைகரி வாக்கு - செவி ஓசை (வாக்கு 4ல் 1)

## 3. சொல் அடைவு

# பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 23 | 06 | இருமடங்கு | வேகத்தின் வர்க்கம் |
| 39 | 13 | என்னும் | எண்ணும் |
| 75 | 11 | ஏகரமெய் | ரகரமெய் |
| 104 | 11 | அவ்வலமரல் | அலமருதல் |